உ

கடவுள் துணை.

# விவேகசிந்தாமணி



## மூலமும்-உரையும்.





சென்னை மண்ணடி புஸ்தக வியாபாரம்

இராமன் அண்டு கம்பெனியாரால்

சென்னை ரூபி

பெரியநாயகியம்மன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1927. [அணா 4.

உ

சிவமயம்.

# விவேகசிந்தாமணி

## மூலமும் உரையும்.

---

### கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

அல்லல்போம் வல்வினைபோ மன்னைவயிற்றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் — நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்துள் வீற்றிருக்குங்
கணபதியைக் கைதொழுதக் கால்.

இதன்பொருள். திருவருணைக்கோபுரத்துள் எழுந்தருளப்பெற்ற விநாயகக்கடவுளை (பத்தியோடு) வணங்கிக் கரங்களால் அஞ்சலிசெய்யின் சகல துன்பங்களும் நீங்கும். வலிய ஆணவமலச்சேஷ்டையு மொழியும். இம்மையிற் றாய்வயிற்றிற் கருத்தரித்துப் பிறந்ததற்குக் காரணமாய்நின்ற பிராரத்தவினையுமகலும். இப்பிறப்பில் தேடப்பட்ட ஆகாமியவினைகளும் போகும் என்றவாறு.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

ஆபத்துக் குதவாப்பிள்ளை யரும்பசிக் குதவாவன்
னந், தாபத்தைத் தீராத்தண்ணீர் தரித்திர மறியாப்
பெண்டீர் கோபத்தை யடக்காவேந்தன் குருமொழி
கொள்ளாச் சீடன், பாபத்தைத் தீராத்தீர்த்தம் பய
னில்லை யேழுந் தானே.

இ-ள். ஆபத்துக்கு உதவாத பிள்ளையும், அரிய பசிக்கு உதவாத அன்னமும், தாகவெப்பத்தைத் தீர்க்காத தண்ணீரும், வறுமையறியாமல் (அதிக செலவு செய்யு) மனைவியும் கோபத்தைத் தணிக்காத

அரசனும், ஆசிரியன் உபதேசித்த மொழிகளைக் கொள்ளாத மாணாக்கனும், பாவங்களைத் தீர்க்காத தீர்த்தங்களும் ஆகிய இவ்வேழினாலும் பயனில்லை எ-று. 1

பிள்ளைதான் வயதின் மூத்தாற் பிதாவின்சொற் புத்தி கேளான், கள்ளினற் குழலாள்மூத்தாற் கணவனைக் கருதிப் பாராள், தெள்ளர வித்தை கற்றாற் சீடனுங் குருவைத் தேடான், உள்ளநோய் பிணிகடீர்ந்தா லுலகர்பண் டிதரைத் தேடார்.

இ-ள். மைந்தரும் வயது முதிர்ந்தபின் தந்தை சொற் புத்திகேளார்கள்: மதுமலர்க் கூந்தலையுடைய மனைவியரும் முதிர்ந்தபின் தன் கணவர்களை மதிக்க மாட்டார்கள் மாணாக்கர்களும் தெளிந்து குற்றமறக் கல்வியைக் கற்றுகொண்டபின் ஆசிரியரைத் தேடார் கள், நோய் தீர்ந்தபின் உலகத்தினரும் வைத்தியரைத் தேடார்கள். 2

குக்கலைப்பிடித்துநாவிக் கூண்டினிலடைத்துவைத்து
மிக்கதோர் மஞ்சள்பூசி மிகுமணஞ் செய்தாலுந்தான்
அக்குலம் வேறதாமோ வதனிடம் புனுகுண்டாமோ
குக்கலே குக்கலல்லாற் குலந்தனிற்பெரியதாமோ.

இ-ள். புனுகுப்பூனை வசிக்கத்தக்க கூட்டினில் நாயைப்பிடித்து அடைத்துவைத்து மேன்மையான மஞ்சள் முதலியவைகளை பூசி அதிக வாசனை யூட்டினாலும் அது ஜாதியில் வேறாகுமோ? அதினிடம் புனுகுண்டாமா? நாய் நாயாகுமல்லால் வேறு பெரிய ஜாதி யாகுமோ? ஆகா எ-று. 3

ஒப்புடன் முகமலர்ந்தே யுபசரித் துண்மைபேசி
உப்பிலாக் கூழிட்டாலு மதுவே யமிர்த மாகும்
முப்பழ மொடுபாலன்னம் முகங்கடுத் திடுவாராயின்
கப்பிய பசியினோடு கடும்பசி யாகுந்தானே.

இ-ள். யாவரும் ஒப்பத்தக்க முகமலர்ச்சியோடு உபசாரஞ்செய்து உண்மையான மொழிகளைப்பேசி உப்பில்லாக் கூழை வார்த்தாலும் (அது) உண்பவர்க்கு



அமிர்தமேயாம். மா-பலா-வாழை முதலிய முப்பழ வர்க்கங்களோடு உயர்ந்த அன்னம் பால் முதலியவைகளை முகங் கடுத்து ஒருவர்க்கிடுவாராகில், அவை யுண்பவர்க்கு உள்ள பசியினும் மிகுபசியை யுண்டாக்கு மல்லாமல் தணிக்காது எ-று. 4

கதிர்மூடு செந்நெல் வாடக் கார்குலங் கண்டு சென்று, பொதிநீரைக் கடலிற்பெய்யுங் கொள்கை போற் குவலயத்தே, மதிதனம் படைத்த பேர்கள் வாடினோர் முகத்தைப் பாரார், நிதிமிகப் படைத்தோர்க் கீவார் நிலையிலார்க் கீயமாட்டார்.

இ-ள். மேகக்கூட்டங்கள் சிவந்த நெற்பயிர்கள் நீரின்றி வாடக்கண்டும் அங்கு நீர்பொழியாது அலைதள்ளாநின்ற சமுத்திரத்தினிடத்து பெய்யுந்தன்மை போல, உலகத்தில் மதிக்கத்தக்க தனமபடைத்தவர்கள் அதிக நிதியுடையவர்க்கீவரல்லால் நிலையிலாது வாடினோர் முகங்கண்டு கொடுக்கார்கள் எ-று.

ஆலிலை பூவுங்காயு மளிதரு பழமுமுண்டேல்
சாலவே பட்சியெல்லாந் தன்குடி யென்றே வாழும்
வாலிபர் வந்து தேடி வந்திப்பா ரோடி கோடி
ஆலிலை யாதிபோனா லங்குவந் திருப்பருண்டோ.

இ-ள். ஆலவிருட்சமானதினிடத்தில் இலை-பூ-காய் இனிமைதரும் பழம் முதலியவைகளிருந்தால் மிகுதியாகப் பலபட்சிகளும் தமக்கு இருப்பிடமென்பதால் கூடி வாழும் இலை முதலியவைகள் நீங்கி பயனற்றிருக்கில், ஒரு பட்சியுஞ்சேரா, அதுபோல மிகுந்த செல்வமிருக்கில அளவிறந்தவர்கள் வந்துகூடி வந்தனம் செய்வார்கள் செல்வமில்லையேல் ஒருவருங்கூடார்கள். 6

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

பொருட்பாலை விரும்புவர்கள் காமப்பாலிடைமூழ்கிப்
புரள்வர் கீர்த்தி
யருட்பாலை மறைப்பாலைக் கனவிலுமே விரும்பார்க
ளறிவொன் றில்லார்

குருப்பாலக்கடவுளர்பால் வேதியர்பாற்புரவலர்பாற்
கொடுக்கக் கோரார் [பொன்
செருப்பாலே யடிப்பவர்க்கு விருப்பாலே கோடிசெம்
பொன் சேவித் தீவார்.

இ-ள். செல்வத்தினிடத்தே அதிக விருப்பங்கொள்பவர்கள் காமத்தினிடத்தே மூழ்கிப்புரள்வார்கள் அருளாகிய செல்வத்தைததரும் தருமத்தைக் கனவிலும விரும்பார்கள். கொஞ்சமும் அறிவில்லாதவராக ஆசாரியரிடத்தும் கடவுளிடததும் அந்தணர்களிடத்தும் அரசர்களிடத்தும ஒருபொருளும் கொடுக்கக் கோரார்கள் கோடி செபபொன்னுயினுந் தனனைப் பாதரட்சையாற் சிக்ஷிப்பவர்க்கே ஆசையோடு வந்தனஞ்செய்து கொடுப்பார்கள் எ-று. 7

வே று.

தண்டாமரையி னுடன் பிறந்துந் தண்டேனுகரா மண்டூகம், வண்டேகானத் திடையிருந்து வந்தேகமல மதுவுண்ணும், பண்டேபழகி யிருந்தாலு மறியார் புல்லோர்நல்லோரைக், கண்டேகளித் தங்குறவாடித் தமமிற் கலப்பர் கற்றோரே.

இ-ள். தவளையானது தன்னுடன் பிறந்து வளர்ந்திருக்கும் குளிர்ந்த தாமரையிலுள்ள தேனை உண்ணவறியாது. காட்டிலிருந்த வண்டுகளோவந்து அந்த மதுவையுண்டு களிக்கும். (அதுபோல) நெடுநாள் பழகியிருக்கினுங் கற்றோர் அருமையை அறிவிலார் அறியார், கற்றவரே அறிவர் எ-று. 8

கலி விருத்தம்.

வானர மழைதனி லனையத் தூக்கணங்
தானொரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும்
ஞானமுங் கல்வியு நவின்ற நூல்களும
ஈனருக் குரைத்திடி லிடர தாகுமே.

இ-ள். முன்னமே பிரயாசைபாற் கூடுகட்டி வசித்திருநத ஓர் தூக்கணபபட்சி விண்காலங் கழிததுத்



திரிந்து வசிக்க இடமின்றி மழையில் நனைந்துவருந்திய ஒரு வானரத்தைக்கண்டு என்னைப்போல் ஓர் இருப்பிடம் செய்துக்கொள்ளலாகாதா? என்றவுடன், குரங்கு சினந்து அதன் கூண்டைப் பறித்தெறிந்தது போல, கல்வியானிறைந்த ஞானநூல்களை அறிவிலார்க்குரைத்திடில் துன்பமே உண்டாகும் எ-று. 9

தலைவன் தலைவியைப் புகழ்தல்.

அறுசீர் விருத்தம்.

வண்டுமொய்த்தனையகூந்தல் மதனபண்டாரவல்லி, கெண்டையோ டொத்தகண்ணாள் கிளிமொழி வாயினூறல், கண்டுசர்க் கரையோதேனோ கனியொடு கலந்தபாகோ, அண்டர்மா முனிவர்க் கெல்லா மமுதமென்றளிக்கலாமே.

இ-ள். வண்டுகள் மொய்த்திருந்ததுபோன்ற கூந்தலையும் கயலையொத்த கண்களையும், கிளிமொழியொத்த சொல்லையுமுடைய மன்மதபொக்கிஷமென்னும் பெயரையுடைய கொடிபோன்றவளின் வாயினூறல் கற்கண்டோ! சர்க்கரையோ! தேனோ! பழத்தொடு கலந்த பாகோ அறியோம் (ஆயினும்) தேவர் முனிவர்களுக்கெல்லாம் அமிர்தமென்று கொடுக்கலாம் எ-று. 10

கற்பகத் தருவைச் சார்ந்த காகமு மமுத முண்ணும், விற்பனவிவேகமுள்ள வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வார், இப்புவி தன்னிலென்று மிலவுகாத் திடுங்கிளிப்போல், அற்பரைச் சேர்ந்தோர் வாழ்வ தரிதரிதாகு மம்மா. *

இ-ள். கற்பகவிருட்சத்தை அடுத்தகாகமும் அமிர்தமுண்ணும், மிகுதியான அறிவுள்ள வேந்தரைச் சேர்ந்த எளியரும் வாழ்வடைவார்கள். இலவு விருட்சத்தின் காயைப்பார்த்து பழுக்கும் பழுக்குமென்று

* அமமா வெனபது வியப்பிடைச்சொல்.

காத்திருந்து அபலமடையுங் கிளியைப்போல் அற்ப
ரைச்சேர்ந்தோ ருலகில்வாழ்வது அரிதினுமரிதாகும்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்.

ஆலகால விடத்தையு நம்பலா மாற்றையும் பெருங்
காற்றையு நம்பலாங்
கோலமாமதயானையை நம்பலாங் கொல்லும் வேங்கைப்
புலியையு நம்பலாங்
காலனார்விடு தூதரை நம்பலாங் கள்ளர் வேடர்
மறவரை நம்பலாஞ்
சேலை கட்டிய மாதரை நம்பினாற் றெருவி னின்று
தியங்கித் தவிப்பரே.

இ-ள் ஆலகாலவிடம், நதி, பிரசண்டக்காற்று, அழகிய பெரிய மதயானை, கொல்லத்தக்க வேங்கை புலி, எமனாலே விடுந்தூதர்கள், வேடர், மறவர் இத்யாதிபேர்களையும் நம்பினாலும் சேலைகட்டிய மங்கையரை (நம்பொணாது) நம்புவரேல் தெருவில்நின்று மயங்கித் தவிப்பார்கள் எ-று. 12

அறுசீர் விருத்தம்.

சங்குவெண் டாமரைக்குத் தந்தைதாயிரவி தண்ணீர், அங்கதைக் கொய்துவிட்டா லழுகச்செய் தந்நீர் கொல்லுந், துங்கவெண் கரையிற்போட்டாற் சூரியன் காய்ந்து கொல்வான், தங்களி னிலைமை கெட்டா லிப்படித் தயங்குவாரே.

இ-ள். சங்குபோலுஞ் வெள்ளைத் தாமரைக்குச் சூரியனும் தண்ணீரும் பிதா மாதாக்களாக விருக்கின் அத்தாமரையைக் கொய்துவிடில் அந்நீரேயதனை அழுகச்செய்து கொல்லும் கரையில்விடில் சூரியன் காய்ந்துகொல்வான் அதுபோலத் தங்கள் நிலைவிட்டுப் பெயர்ந்தவர்கள் இவ்விதமவருந்துவார்கள் எ-று.



எண்சீர் விருத்தம்.

நாய்வாலை யளவெடுத்துப் பெருக்கித் தீட்டி
நற்றமிழை யெழுதவெழுத் தாணி யாமோ
பேய்வாழுஞ் சுடுகாட்டைப் பெருக்கித் தள்ளிப்
பெரியவிளக் கேற்றிவைத்தால் வீட தாமோ
தாய்வார்த்தைக் கேளாத சகசண் டிக்கென்
சாற்றிடினு முழுத்தகுணந் தவிரமாட்டான்
ஈவாரை யீயவொட்டா னிவனுமீயா னெழுபிறப்பி
லுங்கடையா மிவன் பிறப்பே.

இ-ள். நாயினதுவாலை (எழுத்தாணி) இலக்கணப்படி நீட்டித்திட்டினாலும் நல்ல தமிழ் எழுத்துக்களை எழுதுங் கருவியாகுமா? பேய்கள்வாழுஞ் சுடுகாட்டைக் கூட்டித்தள்ளி பெரியதாகிய விளக்கேற்றிவைத்தாலும் வாசஞ்செய்தற்குரிய வீடாகுமா? தாய்மொழிகேளாத சகசண்டிக்கு எவ்விதம் உரைக்கினும் உலோபகுணத்தை விடமாட்டான். கொடுப்பவரையுங்கொடுக்கவொட்டான். தானுங்கொடான், இவன் ஜன்மம் எழுவகை பிறப்பினுமீனத்வமடைந்த கடைஜன்மமேயாகும் எ-று. 14

அறுசீர் விருத்தம்.

வெம்புவாள் விழுவாள் பொய்யே மேல்விழுந்தழுவாள் பொய்யே, தபாலந் தின்பாள் பொய்யே சாகின்றே னென்பாள் பொய்யே, அம்பினுங் கொடிய கண்ணாயிரஞ் சிந்தையாளை, நம்பினபேர்களெல்லா நாயினுங் கடையாவாரே.

இ-ள். தியங்குவாள் விழுவாள் மேல்விழுந் தழுவாள். (உரித்தானவள்போல) எச்சிற்றம்பலத்தையுமுண்பாள், (உன்னுடனேகூட) இறப்பேனென்பாள் (இவையாவும்) பொய்யே. இவ்வித ஜாலங்களமைந்த பல கவனங்களையுடைய அம்பினுங் கொடுஞ்செய்கைகளைக்காட்டுங் கண்களையுள்ள மங்கையரை நம்பின

பேர்களெல்லாம் மலமுண்ணும் நாயினுங் கீழ்ப்பட்ட வரே யாவர் எ-று. 15

எண்சீர் விருத்தம்.

கெற்பந்தான் மங்கையருக் கழகு குன்றுங்
 கேள்வியில்லா வரசனா லுலகம் பாழாந்
துற்புத்தி மந்திரியா லரசுக் கீனஞ்
 சொற்கேளாப்பிள்ளைகளாற் குலத்துக் கீனம்
நற்புத்தி கற்பிக்கா லற்பர் கேளார்
 நன்மைசெய்யத் தீமையுட னயந்து செய்வார்
அற்பரோ டிணங்கிவிடிற் பெருமை தாழு
 மரியதவங் கோபத்தா லழிந்து போமே.

இ-ள். மங்கையருக்கு சர்ப்பகதால் அழகுதனையும், (நியாயமுறை) வினவாத அரசனால் உலகுபாழாகும். இராஜாங்கத்துக்கு துற்புத்தியுள்ள மந்திரிகளால் கெடுதியுண்டாகும். அறிவில்லார்க்கு நல்லபுத்திகளைச் சொன்னாலுங்கேளார் நன்மைசெய்பவர்க்கு உடனே தீமையையே பாராட்டிச் செய்வார், இவ்விதமான சிறியவர்களோடு கூடினவர் மகிமை குறையும். கோபத்தினால் அருமையாகிய தவங்களும் சிதைந்து போம் எ-று

அறுசீர் விருத்தம்.

தன்னுடன் பிறவாதம்பி தனைப்பெறாத் தாயார் தந்தை, அன்னிய ரிடத்துச்செல்வ மரும்பொருள் வேசியாசை, மன்னியவேட்டின்கல்வி மறுமனையாட்டி வாழ்க்கை, இன்னவாங் கருமமெட்டு மிடுக்கத்துக் குதவாதன்றே.

இ-ள். உடன்பிறவாத சகோதரன், தன்னைப் பெறாத தாய்தந்தையர், மற்றோரிடத்திலுள்ளசெல்வம், பொருளிச்சைகொண்ட வேசியாசை, எட்டி லெழுதியிருக்குங் கல்வி, அயலான் மனைவியோடு கூடிய வாழ்க்கை இந்த எட்டுவகைகளுந் தக்கசமயத்துக்கு உதவமாட்டா எ-று. 17



ஓர் விரகமுற்றோன் கூறியது.

எண்சீர் விருத்தம்.

ஒருநான்கு மீரரையு மொன்றேகேளா
 யுண்மையா யையரையு பரையுங் கேட்டேன்
இருநான்கு மூன்றடனே யொன்றுஞ்சொல்லா
 இம்மொழியைக் கேட்டபடி யீந்தா யாயின்
பெருநான்கு பறநான்கும் பெறுவாய் பெண்ணே
 பின்னையோர் மொழிபுகல வேண்டா மின்றே
சரிநான்கும் பத்துமொரு பதினைந் தாலே
 சகிக்கமுடி யாதினியென் சகியே மானே.

இ-ள். ஆறுவது ராசி-கன்னி, மூன்றாவது நாள் செவ்வாய் பனிரண்டாவது நட்சத்திரம்-உத்திரம், இருபத்தெட்டாவது வருடம்-ஜெய, இருபத்தொன்பதாவது ஆண்டு-மன்மத (கருத்து) கன்னியே உன் செவ்வாயைக்கேட்டேன் ஒருத்திரப்சொல்வாய் கேட்டபடி கொடுப்பாயாகில் ஜெயம்பெறுவாய். வேறுமறுமொழி சொல்லக்கூடாது மன்மதவேதனை யினி பெண்ணால் சகிக்கமுடியாது மானே! எ-று. 18

ஒரு ஸ்திரீயின் முகத்தையுங் கரத்தையும்
வியந்து கூறியது.

எழுசீரடி யாசிரிய விருத்தம்.

தேனுகர் வண்டு மதுதனை யுண்டு தியங்கியே
 கிடந்ததைக் கண்டு
நானதைச் சம்பு வின்கனி யென்று தடங்கையா
 லெடுத்துமுன் பார்த்தாள்
வானுறு மதியம வந்ததென் றெண்ணி மலர்க்கரங்
 குவியுமென் றஞ்சிப்
போனது வண்டோ பறந்ததோ பழந்தான் புதுமையோ
 விதுவெனப் புகன்றாள்.

இ-ள். தேனையுண்ணத்தக்க வண்டுகள் அந்தமதுக் களையுண்டு மயங்கிக்கிடந்ததைக் கண்ட (ஒருபெண்

அதை நாவற்பழமென்று விசாரித்த தனது கையா லெடுத்துப்பார்த்தாள். அவ்வண்டு (அவள் முகத்தி னழகால்) ஆகாயத்தின்கண்ணுள்ள சந்திரன் வந்த தென்று நினைத்து அதனால் அவள் கரமாகிய தாமரை மலர் மூடிக்கொள்ளுமென்று பயந்து பறந்தது. பின்பு அப்பங்கை பறந்துபோனது வண்டோ! பழமோ! அல்லது யாது புதுமையோ வென்று ஐயமுற்றுச் சொன்னாள் எ-று. 19

எண்சீர் விருத்தம்.

கருதியநூல் கல்லாதான் மூடனாகும்
கணக்கறிந்து பேசாதான் கசடனாகும்
ஒருதொழிலு மில்லாதான் முகடியாகும்
ஒன்றுக்கு முதவாதான் சோம்பனாகும்
பெரியோர்கண் முன்னின்று மரத்தைப் போலும்
பேசாம லிருப்பவனே பேயனாகும்
பரிவுசொலித் தழுவினவன் பசப்பனாகும்
பசிப்பவருக் கிட்டுண்ணான் பாவியாமே.

இ-ள். படிக்கத்தக்க நல்ல சாஸ்திரங்களைக் கல்லா தவன் மூடன், அளவறிந்து பேசாதவன் கசடன், ஒரு தொழிலுமில்லாதவன் மூதேவி, ஒன்றுக்கு முதவாத வன் சோம்பன், மரம்போல வணங்காது அறிவுடை யோர் முன்பாகநின்று அதியா திருப்பவனே பேயன் (அன்பின்றி) அன்புபோற் காட்டித் தழுவுகின்றவன் பசப்புகின்றவன், பசியாளர்களுக்குக் கொடுத்துண்ணாத வன் பாவி எ-று. 20

அறுசீர் விருத்தம்.

தாங்கொணா வறுமைவந்தாற் சபைதனிற் செல்ல நாணும், வேங்கைபோல் வீரங்குன்றும் விருந்தினர்க் காணநாணும், பூங்கொடிமனையாட் கஞ்சும் புல்லருக் கிணக்கஞ்செய்யும், ஓங்கியவறிவுகுன்று முலகெலாம் பழிக்குந்தானே.



இ-ள். பொறுப்பதற்கரிய தரித்திரம் (ஒருவனுக்கு) வந்தால் சபையிற்செல்ல வெட்கமாம். வேங்கைப் புலி போலுள்ள வீரமுங் குறையும். விருந்தினரைப்பார்க்க வும் வெட்கமுண்டாம், புட்பக்கொடி போன்ற (இடை யையுடைய) தன் மனைவிக்கும் பயப்படவேண்டிவரும், அற்பர்களோடும் கூட்டுறவுண்டாம், மென்மேலும் வளரத்தக்க அறிவும் குறையும், உலகமெல்லாம் பழித் தற்கிடமுண்டாம் எ-று. 21

கலி விருத்தம்.

அரும்பு கோணிடி லதுமணங் குன்றுமோ
கரும்பு கோணிடிற் கட்டியும் பாகுமாம்
இரும்பு கோணிடில் யானையை வெல்லலாம்
நரம்பு கோணிடில் நாமதற் கென்செய்வோம்.

இ-ள். புட்பத்தரும்பு கோணலாயிருந்தாலும் அதின் மணம் குறையுமோ? குறையா, கரும்பு கோணலா யிருந்தாலும் வெல்லமும் பாகுமாகும், இரும்பு கோண லானால் பெரியமதயானையையும் ஜெயிக்கலாம், தேகநரம் புகள் கோணிடில் (நிரியாணதிசை ஒருவற்கெய்தில்) நாமெனசெய்வோம் எ-று. 22

வேசி தன் தோழியை வினவுதல்.

அறுசீர் விருத்தம்.

அன்னையே யனையதோழி யறந்தனை வளர்க்கு மாதே, உன்னையோ ருண்மைகேட்பே னுரைதெரிந் துரைத்தல் வேண்டும், என்னையே புணருவோர்களெனக்கு மோரின்ப நல்கிப் பொன்னையுங் கொடுத்துப் பாதப் போதினில் வீழ்வ தேனோ.

இ-ள். தாய்போலுங் கருணையுள்ள பாக்கியமாகிய தருமகுணமுள்ள பெண்ணே! உன்னிடத்தில் ஓர் உண்மை கேட்கின்றேன்; அதைத்தெளிந்து சொல்ல வேண்டும். அதாவது: என்னிடத்து கலவியை விரும்

பினவர்கள் எனக்கு இன்பத்தைக்கொடுத்துப் பொருளை யுங்கொடுத்து எனது மலர்போன்ற காலில் வீழ்கின் றார்கள் யாது காரணம்? எ-று. 23

பொய்மெனப் பணைத்து விம்மிப் போர்மதன் மய ங்கி வீழுங், கொம்மைசேர் முலையி னாளே கூறுவே னொன்று கேண்மோ, செம்மையி லறஞ்செய் யாதார் திரவியஞ் சிதறவேண்டி, நம்மையுங் கள்ளுஞ் சூது நான்முகன் படைத்த வாறே.

இ-ள். பொலிவாகிப்பருத்து விம்முதலுற்று, வலி மையுள்ள மன்மதனையும் மயங்கச்செய்யும் வட்ட வடி வான தனத்தையுடையவளே! ஒன்று சொல்லுகிறேன் கேட்பாயாக; செவ்வையாக தருமஞ் செய்யாதவர்கள் பொருள்களெல்லாஞ் சிதறுதலடையும் பொருட்டே நம்போன்ற வேசியரையும் கள்ளையும் சூதாடுதலையும் பிரமதேவன் படைப்பித்திருக்கிறான் எ-று. 24

இவ்விரண்டு செய்யுட்களும் ஒருதொடர்.

பொன்னொடு மணியுண்டானாற் புலையனுங் கிளைஞ னென்று, தன்னையும் புகழ்ந்துகொண்டு சாதியின் மண முஞ்செய்வார், மன்னரா யிருந்தபேர்கள் வகைகெட் டுப் போவாராயின், பின்னையு மாரோவென்று பேசுவா ரேசுவாரே.

இ-ள். பொருளும் புகழும் (ஒருவனுக்கு) உண்டா னால் அவன் புலையனாகினும், தன சுற்றத்தானென்று புகழ்ந்துகொண்டு உயர்ந்த சாதியிலும் மணமுடிப்பார் கள். அரசராயிருந்தவரும் யாதொருவழியுமின்றிக்கெட் டுப் போவாராகில் அவரை யாரோவென்று இகழ்ச்சி பேசுவார்கள் எ-று. 25

கலி விருத்தம்.

வேத மோதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாதமுன்று மழையெனப் பெய்யுமே.

இ-ள். வேதமோதுகின்ற அந்தணருக்கு ஒருமழை நீதிவழி தப்பாத அரசர்களுக்கு ஒருமழை, அழகிய கற்பிற் சிறந்த மங்கையருக்கு ஒருமழை, ஆக ஒவ் வொரு மாதத்திலும் மூன்றுமழை வருஷிக்கும் எ-று.

அரிசி விற்றிடு மந்தணர்க் கோர்மழை
வரிசை தப்பிய மன்னருக் கோர்மழை
புருடனைக் கொன்ற பூவையர்க் கோர்மழை
வருடமூன்று மழையெனப் பெய்யுமே.

இ-ள். தற்காலம் அரிசிவிற்பனை செய்கின்ற பிராம ணர்களுக்கு ஒருமழை, நியாயந்தவறிய ராசர்களுக்கு ஒருமழை, கணவனைக் கொல்லும் பெண்களுக்கு ஒரு மழை, ஆக ஒவ்வொரு வருடத்திலும் மூன்று மழை பொழிகின்றன எ-று. 27

அறுசீர் விருத்தம்.

திருப்பதி மிதியாப்பாதஞ் சிவனடி வணங்காச்செ ன்னி, இரப்பவர்க் கீயாக்கைக ளினியசொற்கேளாக் காது, புறப்பவர்தங்கள் தண்ணீர் பொழிதரச்சாகாத் தேகம், இருப்பினும் பயனென்காட்டி லெரிப்பினு மில்லைதானே.

இ-ள். ஸ்ரீசிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திவ் யக்ஷேத்திரங்களை மிதியாதான் பாதமும், சிவபெரு மானுடைய பாதத்தை வணங்காதான் தலையும், யாசிப் பவர்க்குக் கொடாதான் கைகளும், இனிமையானசொற் களைக் கேளாதான் செவியும் தங்களை இரட்சிக்கின்ற வர்கள் கண்களிலிருந்து ஜலமொழுகப் பார்த்தும் உயிர்கொடாதான் தேகமும் இருந்தும் பயனென்ன? காட்டில்வைத்து எரித்திடினும் பயனில்லை எ-று. 28

தன்னுடலினுக் கொன்றீந்தால் தக்கதோர் பலமதாகும், மின்னியல் வேசிக்கீந்தால் மெய்யிலே வியாதியாகும், மன்னிய வுறவுக் கீந்தால் வருவது மவக்கமாகும், அன்னிய பாத்துக் கீந்தா லாருயிர்க் குதவியாமே.

இ-ள். தன் தேகத்துக்கு ஒன்றைக்கொடுக்கில் அதற்குத்தக்க பலமுண்டாகும், மின்னலைப்போல அன்பைக்காட்டி மறைக்கும் இயல்புள்ள வேசையருக்குக் கொடுத்தால் தேகத்திற் பிணியுண்டாகும், பொருந்திய உறவினருக்குக்கொடுத்தால் பணபயக்கமே வருவதாகும், அன்னியருக்குக் கொடுத்தால் சார்ந்த உயிர்த்துணையாகும் எ-று. 29

பதினான்குசீர் விருத்தம்.

படியினைப்பொழுதே வதைத்திடும் பச்சைநாவியை நம்பலாம், பழிநமக்கென வழிமறித்திடு பழைய நீலியை நம்பலாம், கொடுமதக்குவ டெனவளர்த்திடு குஞ்சரத்தையு நம்பலாம், குலுக்கப்பேசி நகைத்திடுஞ் சிறு நமரர்களையு நம்பலாம், கடையிலக்கமு மெழுகிவிட்ட கணக்கர் தம்மையு நம்பலாம், காக்கை போல்விழி பார்த்திடுங்குடி காணியாளரை நம்பலாம், நடை குலுக்கிமுகமினுக்கிடு நகைநகைத்திடு மாதரை நம்பொணுதம்மெய நம்பொணுது மெய் நம்பொணுது மெய் நம்பொணுதே.

இ-ள் உலகத்தில் உண்டபொழுதே கொல்லத்தக்க விஷத்தையும், பழிபைக்கருதாது ஓர் வணிகனை வழிமறித்துக் கொலைசெய்த பழயனூர் நீலியையும் கொடிய பருமதமக்களையுடைய மலைபோன்று வளர்ந்திரா நின்ற யானையையும், குலுக்கிப்பேசிச் சிரித்து ஏமாற்றும் வெவ்வஞ்சச்சிறுவரையும், குடிகளுக்குக் கணக்கின் உள்ளபடிகளைக் காட்டாமல் மோசவகையாய் தான் எழுதிவைத்த கட்டுத்தொகையைக் காட்டி வஞ்சிக்கும் கணக்கர்களையும், ஓரே விழிப்பயுடையதாய் கூரிய பார்வையை யுடையதான காக்கையைப்போல பயிரிடுங் குடிகளுக்கு யாதொரு ஆதாயமுங் கிட்டாதபடி கட்டிக்காக்கும் காணியாட்சியை யுடையவரையும் நம்பலாம் நடக்கும்போதே குலுக்கியும் முகத்தை மஞ்சள் முதலியவற்றால் மினுக்கியும் பற்கள் தெரிய நகைத்தும் திரிகின்ற மாதர்களை நம்பகூடாது உண்மை உண்மை உண்மை எ-று. 30



கலிவிருத்தம்.

வண்டுக ளிருந்திடின் மதுவை யுண்டிடுந்
தண்டமி ழிருந்திடிற் சங்கஞ் சேர்ந்திடும்
குண்டுணி யிருந்திடிற் கோள்கள் மிஞ்சிடும்
பெண்டுக ளிருந்திடிற் பெரிய சண்டையே.

இ-ள். வண்டுகளிருந்தால் தேனையுண்ணும், அழகிய தமிழிருந்தால அர்ங்க கூட்டத்தினர் உறவுண்டாம் குண்டுணிகளிருந்தால் கோள்களே மிகுதியுண்டாம், பெண்கள் பலர் கூடியிருந்தால் பெரியசண்டை சச்சரவுகளுண்டாகும் எ-று. 31

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கற்புடை மாதர் கொங்கை கவரிமான் மயிரின்கற்றை, வெற்புறு வேங்கையின்றோல் வீரன்கை வெய்ய கூர்வேல், அற்பர்தம் பொருள் கடாமு மவரவ ரிறந்த பின்னே, பற்பலர் கொளவாரிந்தப் பாரினி லுண்மை தானே.

இ-ள். கற்புள்ள பெண்கள் முலை, கவரிமான் மயிர் முடி, மலையிலுள்ள வேங்கையின் தோல், சுத்தவீரர்களின் கையிலுள்ள வேல், அற்பர்களிடத்தி லுள்ள பொருள் இவையாவும் அவரவர் உயிர்நீங்கியபின்னே பலருங் கைக்கொள்வார்கள் இவை உலகத்தில் சத்தியமே எ-று. 32

வீணர்பூண் டாலுந்தங்கம் வெறும்பொய்யா மேற்பூச்சென்பார், பூணுவார் தராப்பூண்டாலும் பொருள்

திய தங்கமென்பார், காணவே பனைக்கீழாகப் பாற் குடிக்கினுங் கள்ளேயென்பார், மானுலகத்தோர் புல்லர் வழங்குரை மெய்யென்பாரே.

இ-ள். அற்பர்கள் தங்கத்தை அணிந்திருந்தாலும் கண்டவர்கள் தங்கமல்ல மேற்பூச்சென்பார்கள், பூணத் தக்க செல்வர்கள் தரா பித்தளை முதலிய நகைகளை யணிந்திருந்தாலும், உயர்ந்த தங்க மென்பார்கள். பலரும்பார்க்கப் பனைநிழலிலிருந்தாலும் பாலைக்குடித்தாலும் கள் குடித்தானென்பார்கள், பெருமைதங்கிய உலகத்தோர் அறிவினருரைக்கும் மொழிகளையே மெய்யென் பார்கள் எ-று. 33

கலிவிருத்தம்.

ஓரியே மீனுவந் தூணிழந் தையோ
நாரியே கண்பிழை நாட்டி வில்லையோ
பாரிய கணவனைப் பழுது செய்துநீ
நீரிலே யிருப்பது நிலைமை யல்லவே.

இ-ள். கணவனை இகழ்ந்து நீங்கிவந்த ஒரு பெண், ஓ நரியே ஓர் மீனை யிச்சித்து வாயிலிருந்த உணவை யிழந்தனையே யாதுகாரணமென்ன, அந்தநரி ஓபெண்ணே! ஏதேனும் தவறுதல் உலகத்திலில்லையா? நீயோ பெருமைதங்கிய புருடனையிகழ்ந்து நீ இத்தன்மையி லிருப்பது உன் தன்மைக்கழகல்லவே என்றது எ-று.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

சம்புவே யென்ன புத்தி சலந்தனின் மீனை நம்பி
வம்புறுவடத்தைப்போட்டு வானத்தைப்பார்ப்பதேனோ
அம்புவி யாதே கேளா யரசனை யகலவிட்டு
வம்பனைக் கைபிடித்த வ றுபோ லாயிற் றன்றே.

இ-ள். நரியே [illegible] மதிபால் ஜலத்திற் றுள்ளிய மீனைநம்பி, [illegible] ள்ள மாமிசத்துண்டை யிழந்து ஆகாயத்தை எட்டிப்பார்க்கின்றனை ? யாது காரணமெ



ன்றுகேட்ட பெண்ணைப் பார்த்து அந்தநரி உலகத்தில் மெச்சத்தக்க பெண்ணே! தன் நாயகனாகிய அரசனை யகலவிட்டு மற்றொரு புருஷனைக் கைபிடித்தவாறு போலாயிற்றென்றறிவாயாக என்றது எ-று. 35

மூப்பிலாக் குமரிவாழ்க்கை முனையிலா வரசன் வீரங், காப்பிலாவிளைந்தபூமி கரையிலா திருந்தவேரி, கோப்பிலான் கொண்டகோலங் குருவிலான்கொண்ட ஞானம், ஆப்பிலாச் சகடுபோலே யழியுமென்றுரைக்கலாமே.

இ-ள். தனக்கு மூத்தோரில்லாமற் றனியேவாழும் பாலியப்பெண்வாழ்வும், கோபமில்லாத அரசன் வீரமும், காத்தலில்லாமல் விளைந்தபூமியும், கரையில்லா திருந்த ஏரியும், தன்னிடம் வேண்டியவைக ளமைதலில்லாதவன் கொள்ளும் டம்பமும், ஆசாரியனில்லாதவன் கொண்ட ஞானமும் ஆகிய இவை யாவும் அச்சாணியில்லாத வண்டிபோல் அழிந்துபோமென்று சொல்லலாம் எ-று. 36

ஒரு பெண் நடையைப்பற்றிக் கூறியது.

சந்தக்கலி விருத்தம்.

பொன்னின்மணி கிண்கிணி சிலம்பொலி புலம்ப
மின்னுமணி மேகலைகள் மெல்லென வொலிப்பச்
சின்னமலர் கொண்டுசில சேடியர்கள் சூழ
அன்னமென வல்லவென வாவெனவுரைத்தார்.

இ-ள். பொன்மணிகளும், சதங்கைமணிகளும், சிலம்புகளுஞ் சப்திக்கப் பிரகாசிக்கின்ற மணிமேகலைகள் மெதுவாய் ஒலிக்க, அரும்பு மலர்களைக்கொண்டு சில பாங்கியர்கள் சூழ்ந்துவர நடக்கின்றவள் அன்னமோ அல்லவோவென்று கண்டோர் கூறினர் எ-று. 37

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கானலை நீரென் றெண்ணிக் கடுவெளி திரியு மான் போல், மானுறு மிலவு காத்த மதியிலாக் கிள்ளையே

போல், தேனினைக் கண்டு தும்பி தியங்கிய தகைமை யேபோல், நாதனை யரசென் றெண்ணி நாளையும் போக் கினேனே.

இ-ள். கானலைத் தண்ணீரென்றுநினைத்து வெட்ட வெளியில் ஓடித்திரியும் மான்போலவும், பழுக்குமென்று இலவுவிருட்சத்தைகாத்த அறிவில்லாத கிளியைப்போல வும் கள்ளையுண்டுமயங்கிய வண்டுபோலவும், நானுன்னை ராஜனென்றுகருதி நாளை வீணாகப் போக்கினேன் எ-று.

தலைவனைப்பிரிந்த தலைவி வருந்தல்

குறுங்கழிநெடில் விருத்தம்.

சங்குமுழங்குந் தமிழ்நாடன்றன்னை நினைத்தபோ தெல்லாம், பொங்குகடலு முறங்காது பொழுதோர் நாளும் விடியாது, திங்களுறங்கும் புள்ளுறங்குந் தென்ற லுறங்குஞ் சிலகாலம், எங்குமுறங்கு மிராக்கால மென் கண்ணிரண்டு முறங்காதே.

இ-ள். சங்குகள் முழங்காநின்ற எனது தமிழ்நாட் டதிபனை நினைக்கும்போ தெல்லாம் அலைகள்வீசாநின்ற சமுத்திரம் தூங்குவதில்லை, பொழுதும் விடிகிறதில்லை சந்திரனும் அன்றில் குயில் முதலிய பட்சிகளும் தென் றற்காற்றும் சிலகாலந்தூங்கும் பேய்முதலிய சகலபிரா ணிகளும் தூங்கத்தக்க விராக்காலத்தில் யாதுகாரண மோ என் கண்கள்மட்டும் உறங்குவதில்லை எ-று.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அரவினை யாட்டு வாரு மருங்களி றாட்டுவாரும்
இரவினிற் றனிப்போ வாரு வேரிநீர் நீந்து வாரும்
விரைசெறி குழலியான வேசையை விரும்பு வாரும்
அரசனைப் பகைத்திட்டாரு மாருயி ரிழப்பர்தாமே.

இ-ள். பாம்பாட்டுகிறவர்களும், அரிய யானைப்பாகர் களும், இராத்திரியில் தனிவழி செல்கின்றவர்களும்



தடாக ஜலத்தில் நீந்துகின்றவர்களும், வாசனை நிறைந்த குந்தலையுடைய வேசியரை இச்சிக்கின்றவர்களும் அர சர்களைப் பகைத்துக் கொண்டவர்களும் பொருந்திய உயிரை இழப்பார்கள் எ-று. 40

வாழ்வது வந்தபோது மனந்தனின் மகிழ வேண்டாம் தாழ்வது வந்ததானாற் றளர்வரோ தக்கோர் மிக்க, ஊழ் வினை வந்ததானா லொருவரால் விலக்கப்போமோ, ஏழை யாயிருந்தோர் பல்லக் கேறுதல் கண்டிலீரோ.

இ-ள். வாழ்வுவந்தகாலத்தில் மனதில் மகிழ்ச்சியை வைக்கக்கூடாது, தாழ்வுவந்ததென்று வருந்தவுங் கூ டாது, இது மேலானோர் செய்கை ஊழ்வினையால் வரும் செய்கைகளை யாரால் விலக்கலாம், ஏழையா யிருந்தவர் கள் உடனேசிவிகையிலேறத்தக்க செல்வவான்களானதை நீங்கள் பார்த்ததில்லையா எ-று. 41

அறுசீர் விருத்தம்.

பருப்பதங்கள்போ னிறைந்திடு நவமணிப்
பலன்களைக் கொடுத்தாலும்
விருப்ப நீங்கிய கணவரைத் தழுவுதல்
வீணதாம் விரையார்ந்த
குருக்கு சந்தனக் குழம்பினை யன்பொடு
குளிர்தர வணிந்தாலும்
செருக்கு மிஞ்சிய வற்பர்தந் தோழமை
செப்பவு மாகாதே.

இ-ள். மலைகளைப்போலக் குவியல் குவியலாக ஒன் பதுவகை இரத்தினங்களையும், பலனைக் கொடுத்தா லும் விருப்பமில்லாத கணவரைக் கூடுதல்வீணையாம், வாசனைபொருந்திய மிகுந்த செருக்குடைய அற்பர் கள் சந்தனக்குழம்பை ஆசையோடு குளிர்ச்சிதரப்பூ சினாலும் அவர்கள் சிநேகத்தை வாயினால் சொல்லவுங் கூடாது எ-று. 42

கலிவிருத்தம்.

பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும்
மருந்துள தோவெனில் வாக டத்திலை
தரித்திரமென்னுமோர் மருந்திற் றீருமே.

இ-ள். ஒருவனுக்குப் பெருத்த செல்வச் செருக்கென்னும் வியாதிவந்து கூடினால், உருவந்தெரியாமல் கண்ணொளி மழுங்கிவிடும், இதற்கு மருந்துள்ளதோ வென்று ஆராயில் வயித்தியர்கூறிய வாகடங்களிலில்லை. தரித்திரமென்று சொல்லத்தக்க மருந்தினால் உடனே தீரும் எ-று. 43

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அத்தியின் மலரும்வெள்ளை யாக்கைகொள் காக்கை தானும், பித்தர்தம் மனமுநீரிற் பிறந்தமீன் பாதந் தானும், அத்தன்மால் பிரமதேவ னாலளவிடப்பட்டாலுஞ், சித்திர விழியார் நெஞ்சந் தெளிந்தவ ரில்லை கண்டீர்.

இ-ள். அத்திமரத்தின் பூவையும், வெள்ளை நிறங்கொண்டகாக்கையும், பைத்தியக்காரர்மனதையும், ஜலத்திற் பிறந்த மச்சங்களின் பாதத்தையும், சிவன் விஷ்ணு பிரமதேவன் முதலியவர்களால் அளவிடப் பட்டு ஒருவேளைகண்டறிந்தாலும், சித்திரத்தைபொத்த கண்களையுடைய பெண்களின் நெஞ்சத்தின் கருத்தைக்கண்டு தெளிந்தவர்கள் உலத்திலில்லை எ-று. 44

சொல்லுவார் வார்த்தைகேட்டுத் தோழமை யிகழ்வர்புல்லர், நல்லவர் விசாரியாமற் செய்வரோநரி சொற்கேட்டு, வல்லியம் பசுவுங்கூடி மாண்டதோர் கதையைப்போல, புல்லிய ரொருவராலே போகுமே யாவு நாசம்.

இ-ள். அற்பர்கள் பிறர்சொல்லும் வார்த்தைகளைக் கேட்டுச் சிநேகத்தை யிகழ்வார், மேலானவர்கள் நன்றாய்



விசாரியாமல் ஒன்றையும் செய்வரோ செய்யார் * ஓர் நரியின் சொல்லைக்கேட்டு ஒரு புலியினிடத்துப் பசு சேர்ந்து இறந்துபோன கதையைப்போல் அறிவீனராலே யாவும் நாசமாய்ப்போம் எ-று. 45

கதலி வீரர் களத்திடை வையினுங்
குதலை வாயிற் குழவிகள் வையினு
மதன லீலையில் மங்கையர் வையினும்
இதமுறச் செவிக் கின்பம் விளையுமே.

இ-ள். விருதுகளைப் பெற்ற சுத்தவீரர்கள் யுத்தகளத்தினிடத்துத் திட்டினாலும், மழலைச்சொற்களையுடைய குழந்தைகள் வைதாலும், மன்மத லீலாவினோதக்கலவியில் மங்கையர்கள் நிந்தித்தாலும், இனிமையுறச் செவிக்கு இன்பமே உண்டாகும் எ-று. 46

புத்திமான் பலவானாவான் பலமுளான் புத்தியற்றால், எத்தனைவிதத்தினாலு மிடரது வந்தே தீரும், மற்றொரு சிங்கந்தன்னை வருமுயல்கூட்டிச் சென்றே, உற்றதோர் கிணற்றில் சாயல் காட்டிய வுவமைபோலாம்.

இ-ள். ஒருசிங்கத்தை ஒருமுயல் கூட்டிக்கொண்டுபோய் ஒருகிணற்றில் அதன் சாயலைக் காட்டிக்கொன்ற உவமைகதைபோல, எவ்வளவு வீரத்தன்மையுள்ளவனும் புத்தி யில்லாவிடில் எந்தவிதத்தினாலும் அவனுக்குத் துன்பமே வந்துசேரும் ஆகலால் புத்தியுள்ளவனே பலவான் எ-று. 47

மானமுள்ளோர்கடன்னாற் மயிரறினுயிர்வாழாத
கானுறுகவரிமான்போற் கனம்பெறுபுகழேபூண்பார்
மானமொன்றில்லார்தாமு மழுங்கலாய்ச்சவங்களாகி
ஈனமாங்கழுதைகொப்பாயிருப்பரென் றுரைக்கலாமே.

இ-ள். தன்னிடத்திலுள்ள ஓர் மயிர் அறுந்தாலும் உயிரை விடுகின்ற கவரிமானைப்போல் மானமுள்ள

* இக்கதை பஞ்சதந்திரத்தில் உள்ளது.

வர்கள் எப்பொழுதும் புகழைடைய விரும்புவார்கள், சமானமில்லாதவர் புத்திமழுங்கிச் சவங்களாகி ஈனமடைந்த கழுதைக்கொப்பாய் இருப்பார் எ-று. 48

கலிநிலைத் துறை.

கழுதை காவெனக் கண்டுநின் றுடியவலகை
தொழுது மீண்டுமக் கழுதையைத் துதிசெய்துதான்
பழுதிலா நமக்கார்நிக ராமெனப் பகரும்
முழுது மூடரை மூடர்கொண் டாடிய முறைபோல்.

இ-ள். அறிவில்லாத மூடர்களை அவரினுந்தாழ்ந்த முழுமூடர்கள் கொண்டாடிப் புகழ்வது எவ்வாறெனில், ஒருகழுதை காவென்று கத்தியதைப் பார்த்து அதற்கிசைய நின்றுடிய ஒருபிசாசு திரும்பவும் அந்தக் கர்த்தபத்தை வணங்கித் துதிசெய்ய அதுகுற்றமில்லாக் குரலையுடைய நமக்கு ஒப்பானவர்கள் யாவரெனச் சொல்லுவது போலிருக்கும் எ-று. 49

அறுசீரடியாசிரிய விருத்தம்.

ஆசாரஞ் செய்வா ராகி லறிவொடு புகழு முண்டாம்
ஆசார நன்மையானு லவனியிற் றேவ ராவர்
ஆசாரஞ் செய்யா ராகி லறிவொடு புகழு மற்றுப்
பேசார்பொற் பேச்சுமாகிப் பிணியொடுநரகில்விழ்வர்.

இ-ள். ஒழுக்கந்தவறாது செய்வாராகில் (அவருக்கு) நல்ல ஞானத்தோடு புகழுமுண்டாம், அவ்வொழுக்கமே நன்மையாய் அதிகரிக்குமாகில் அவரே உலகத்திலதெய்வமாவார், ஒழுக்கந் தவறுவாராகில் அறிவோடு நல்லகீர்த்தியுமற்று ஊமையர்போல் பேசுவாராகில் இம்மையிற் பிணியாலுழன்று மறுமையில் நரகத்தையடைவார்கள் எ-று. 50

செல்வம்வந் துற்றபோது தெய்வமுஞ் சிறிதுபேணார், சொல்வதையறிந்து சொல்லார் சுற்றமுந் துணையும்

* இக்கதை பஞ்சதந்திரத்தில் உள்ளது.



பேணார், வெல்வதே கருமமல்லால் வெம்பகை வலிதென்றெண்ணார், வல்வினை விளைவும்பாரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்.

இ-ள். உலகத்தில்வாழும் மானிடருக்குச் செல்வமானது மிகுதியாய்வந்து சேர்ந்தபொழுது கொஞ்சமேனுந் தெய்வத்தையுங்கருதார், சொல்லுகின்றதைக் கேட்டுப் பதிலுஞ் சொல்லார், பந்து மித்திரர்களையுங் கவனியார், எக்காரியத்திலும் ஜெயத்தையே கருமமாகக் கருதுவரேயல்லாமல் வெவ்விய பகைவனுடைய வலிமையை யெண்ணார்கள், வலிய பாவவினையையும் பாரார்கள் எ-று. 51

கலி விருத்தம்.

யானையைச் சலந்தனி லிழுத்த வக்கரா
பூனையைக் கரைதனிற் பிடிக்கப் போகுமோ
தானையுந் தலைவருந் தலம்விட் டேகினால்
சேனையுஞ் செல்வமுந் தியங்கு வார்களே.

இ-ள். ஜலத்திலிருந்து ஒரு பெரிய மதயானையைக் கடித்திழுத்த முதலையானது கரையிலுள்ள ஒரு பூனையைப் பிடிக்கக் கரையிற் செல்லமாட்டாது (அதுபோல) அரசர்களுஞ் சதுரங்க சேனைகளுடனே தங்களிருப்பிடம்விட்டுச் சென்றால் செல்வமிகுந்த சேனையுடன் தியங்குவார்கள் எ-று. 52

அறுசீர் விருத்தம்.

கொண்டநற் கலைக ளோடுங் குணமிலாக் கோதைமாரை, கண்டுவிண் டிருப்பதல்லால் கனவிலும் புல்லவொண்ணா, தண்டன மதுவை யுண்ண வோவியம் பூவில்வீழ்ந்த, வண்டினம் பட்டபாடு மனிதரும் படுவர்தாமே.

இ-ள். நல்ல சாஸ்திரப்பயிற்சியும் நற்குணமு மில்லாத மங்கையர்களைக் கண்ணால் நிதானித்துப் பார்த்து அவர்களை விலக்கவேண்டுமே யல்லாமல் கனவிலாயினுஞ்

சேரவொண்ணாது சேருவரேல், எழுதியசித்திரமாகிய தாமரையில் தேனுண்டென்று விழ்ந்து வருந்திய வண்டு கூட்டங்கள் படும்பாடு அவர்களும் அடைவார்கள் எ-று. 53

* மயில்குயில் செங்கா லன்னம் வண்டுகண் ணாடி பன்றி, அயிலெயிற் றரவு திங்க ளாதவனாழி கொக்கோ, பெரும்விண் கமலப்பன்மூன் றறுகுண முடையோர் தம்மை, இபலுறுபுவியோர்போற்று மீசனென்றெண்ணலாமே.

இ-ள். மயில், குயில், சிவந்த கண்களையுடைய அன்னம், வண்டு, கண்ணாடி, பன்றி, கூர்மைபொருந்திய பற்களையுடைய பாம்பு, சந்திரன், சூரியன், சமுத்திரம், உயர்ந்த ஆகாயம், தாமரை. இந்தப்பதின்மூன்று பொருள்களினிடத்துமுள்ள குணங்களை வகித்தவர்கள் உலகத்தவரெல்லாம் போற்றும் ஈசனென்று சொல்லலாம் எ-று. 54

கலி விருத்தம்.

தெருளிலாக் கலையினர் செருக்கு மாண்மையும்
பொருளிலா வறிஞர்தம் பொறி யடக்கமும்
அருளிலா வறிஞர் மௌன நாசமுங்
கருவிலா மங்கையர் கற்பு மொக்குமால்.

இ-ள். தெளிவில்லாத கல்வியாளர்களுடைய அகங்காரமும், மனோவூக்கமும், பொருளில்லாத தரித்திரர்களுடைய மெய், வாய், கண், மூக்கு, செவியென்கிற ஐம்பொறிகளினடக்கமும் அருளில்லாத ஞானிகளின் மவுனநாசமும் மகப்பேரில்லாத மங்கையர்கள் கற்பும் ஆகியயிவைகள் ஒன்றுக்கொன்று சமமாகும் எ-று. 55

மங்குலம் பதினாயிரம் யோசனை மயில்கண்டு நடமாடும், தங்குமா நூறுநூ றாயிரம்யோசனை தாமரை முகம் விள்ளும், திங்களா வதற்கிரட்டி யோசனை

* இவைகளின் குணங்களை விரிக்கிற் பெருகும் ஆசிரியர்களிடத்துக் கேட்டு உணர்க.



யுறச் சிறந்திடு மரக்காம்பல், எங்கணாயக னன்பராயிருப்பவ ரிதயம்விட் டகலாரே.

இ-ள். ஐம்பதினாயிரம் யோசனை தூரத்திலுள்ள மேகத்தைக்கண்டு மயில் நடனம்பண்ணும், நூறாயிரம் யோசனை தூரத்திலுள்ள சூரியனைக்கண்டு தாமரை முகமலர்ச்சியைக்காட்டும், இருநூறாயிரம்யோசனை தூரத்திலுள்ள சந்திரனைக்கண்டு செவ்வல்லிமலர்ந்து சிறப்பையடையும், எவ்வளவு தூரத்திலிருப்பாராயினும் அன்பாயிருப்பவர் இருதயத்தைவிட்டுஅகலார்கள் எ-று. 56

சந்திரனில்லாவானந் தாமரையில்லாப்பொய்கை
மந்திரியில்லாவேந்தன் மதகரியில்லாச்சேனை
சுந்தரப்புலவரில்லாத் தொல்சபைசுதரில்லாவாழ்வு
தந்திகளில்லாவீணை தனமிலாமங்கைபோலாம்.

இ-ள். சந்திரனில்லாத ஆகாயம், தாமரையில்லாத தடாகம், மந்திரியில்லாத அரசன், மலைபோலும் மதயானையில்லாத சேனைகள், அழகிய வித்வான்களில்லாத சபை, மக்களில்லாத வாழ்க்கை, தந்தி நரம்பில்லாத வீணை, இவையாவும் இரண்டு ஸ்தனங்களுமில்லாத மங்கையர் சுகம்போல் வீணாகும் எ-று. 57

கலி விருத்தம்.

குரைகடல்வறுமையுங் குறத்திபுண்மையும்
நரைசராபருந்தையுண் டிளமைநண்ணலும்
விரைசெறிகுழலினாள் வேசைபாசையும்
அரையரான்பவைமது மஞ்சுமில்லையே.

இ-ள். சப்திக்காநின்ற சமுத்திரத்திற்குச் சலதரித்திரமும், திருடுந்தொழிற்கற்ற குறத்திகளின் சத்தியமும், நரைதிரைகளறுமபடி அவிழ்தமுண்டு பாலப்பருவமடைதலும், வாசனைசெறிந்த கூந்தலையுடைய வேசியர்களுக்கு ஒருவர்மேலுண்மையான ஆசையுண்டாதலும்,

அரசர்கள் ஒருவரிடத்தில் நீங்காத அன்புடையவரா யிருத்தலும் ஆகிய இவை ஐந்தும் அடைவதற்கு அரிது

அறுசீரடியாசிரிய விருத்தம்.

முடவனை மூர்க்கன்கொன்றால் மூர்க்கனை முனிதான் கொல்லும், மடவனைவலியான் கொன்றால் மறலிதானவ னைக்கொல்லும், தடவரை முலைமாதேயித் தரணியிலுள் ளோர்க்கெல்லா, மடவனையடித்தகோலும் வலியனையடிக் குங் கண்டாய்.

இ-ள். மூடவனை அகங்காரகுணமுள்ள மூர்க்கன் கொன்றால், அம்மூர்க்கனை அவனிலும் அதிக கோப முடைய ஒருவன் கொல்லுவான். அறிவில்லாத ஏழை பை வலியுள்ளவன் கொல்வானாகில் அவனை இயமன் கொல்வான், விசாலித்த மலைபோலு முலையையுடைய வனே ஏழையை அடித்தகோலே பலவானையும் அடிக் கும் என்றறிவாயாக எ-று. 59

பொருளிலார்க்கின்பமில்லை புண்ணியமில்லையென்று
மருவியகீர்த்தியில்லை மைந்தரிற்பெருமையில்லை
கருதியகருமமில்லை கதிபெறவழியுமில்லை
பெருநிலந்தனிற்சஞ்சாரப் பிரேதமாய்த்திரிகுவாரே.

இ-ள். பொருளில்லாதவருக்கு இன்பம், புண்ணியம் பொருந்திய கீர்த்தி, மக்களாற்பெருமை, நினைத்தபடி முடிக்கும வல்லமை, மோட்சமடையும்வழி இவைகள் கிடையா அவர் பெருத்த உலகத்தில் நடக்குந்தன்மை யுள்ள பிணமென்று சொல்லும்படித்திரிவார்கள். 60

தூப்பினிற் புதைத்த கல்லுந் துகளன்றிச் சுடர்கொ டாது, பாப்புக்குப் பால்வார்த்தாலும் பழகினும்நன்மை தாரா, வேம்புக்குத் தேன்வார்த்தாலும் வேப்பிலை கச ப்புமாறா, தாம்பல நூல்கற்றாலுந் துற்சனர் நல்லோ ராகார்.



இ-ள். வழியில் பலபேர் மிதிக்கும்படி புதைத்த கல்லாயிருந்தாலுந் தேய்ந்து கலங்கமின்றிப் பிரகாசத் தைக் கொடாது, பாம்புக்குப் பால்வார்த்துத் தினந்தோ றும் அதனுடன் பழகிவந்தாலும் நன்மையைத்தராது, வேம்புக்குத் தேனைவார்த்து வளர்த்தாலும் அதின்கச ப்புமாறாது, துற்சனர்கள் பல நூல்களைக்கற்றாலும் நல் லோராகார்கள் எ-று. 61

கல்லாதமாந்தரையுங் கடுங்கோபத்துரைகளையும் கா லந்தேர்ந்து, சொல்லாத வமைச்சரையுந் துயர்க்குத வாத் தேவரையுஞ் சுருதிநூலில், வல்லாவந்தணர் த மையுங் கொண்டவனோ டெந்நாளும் வாதுபேசி, நல் லார்போ லருகிருக்கு மனைவியையு மொருநாளுநம்பொ ணாதே.

இ-ள். கல்வியில்லாத மனிதர்களையும் மிகுந்த கோப முள்ள அரசர்களையும், வருங்காலமறிந்து சொல்லாத மந்திரிகளையும், துன்பம் வந்தவிடத் துதவிசெய்யாததெ ய்வங்களையும், வேதநூலில் வல்லவரில்லாத பிராமணர் களையும், கணவனோ டெந்தநாளிலும் வல்லமைப்பேசி நல்லவர்களைப்போல் அருகிலிருக்கும் மனைவியையும் ஒரு நாளும் நம்பக்கூடாது எ-று. 62

தேளது தீயில் வீழ்ந்தாற் செத்திடா தெடுத்தபே ரை, மீளவே கொடுக்கினாலே மெய்யுறக்கொட்டலே போல், எளனம் பேசித் தீங்குற் றிருப்பதை யெதிர்கண் டாலுங், கோளினர் தமக்குநன்மை செய்வது குற்ற மாமே.

இ-ள். தேளானது நெருப்பில் விழுந்தால் இறந்து போமென்றுகருதி எடுத்தவரைக் கொடுக்கினாலேதுன்ப முறும்படி கொட்டுதல்போல கேளிகள்பேசி பலவித தீங்குகளைக் கொண்டு இருப்பதை நேராகப்பார்த்தும் உலகத்தில் கோளுடையவர்க்கு நன்மைசெய்தால் குற்ற மே உண்டாகும் எ-று. 63

அறிவுளோர் தமக்குநாளு மரசருந் தொழுதுவாழ்
வார், நிறைபொது புவியிலுள்ளோர் நேசமாய் வணக்
கஞ்செய்வார். அறிவுளோர் தமக்குயாதோ ரசடது வரு
மேயாகில், வெரியரன் றிகலா ரென்று மேதினி யுள்
ளோர் தாமே.

இ-ள். அறிவுடையவர்களுக்கு அரசரும் வணங்கிவாழ்வார்கள், உலகத்தவர்களும் உண்மையான நேசத்தோடுபணிதல் செய்வார்கள், அவர்க்கு யாதேனும் ஒரு குற்றம் நேரிட்டாலும் வெறுக்கத் தக்கவரென்று இகழ்ச்சி செய்பார் இவ்வுலகினர் செய்கை இத்தன்மையதாம். 64

குருவுபதேசமாதர் கூடியவின்பந்தன்பால்
மருவியநியாயங்கல்வி வயதுதான்செய்ததன்மம்
அரியமந்திரம்விசார மாண்மையிங்கிவைகளெல்லா
ஒருவருந்தெரியவொண்ணா துரைத்திடிலழிந்துபோமே.

இ-ள். ஆசிரியர்செய்தவுபதேசம், ஸ்திரீயினிடத்தனுபவித்தஇன்பம், தன்னிடத்துப் பொருந்திய நியாயம் கல்விஆயுள் தன்னாற்செய்ததருமம், அரிதாகிய மந்திரம், துன்பம் வல்லமை இவைகளெல்லாம் ஒருவருக்குந் தெரியக்கூடாது வெளிவிடில் அழிந்துபோம் எ-று. 65

இடுக்கினால் வருமையாகிய பேற்றவர்க் கிசைந்தசெல்
வங், கொடுப்பதே மிசவு நன்று குற்றமே யின்றிவாழ்
வார், தடுத்ததை விலக்கினோர்க்குத் தக்க நோய்பிணிக
ளாகி, உடுக்கவே யுடையுமின்றி யுண்சோறும் வெல்ல
மாமே.

இ-ள். துன்பமடைந்து தரித்திரத்தால் யாசிப்பவர்க்கு மனமகிழப் பொருள்கள் கொடுக்கின்றவரைத் தடுத்து விலக்குகின்றவர்களுக்குத் தகுதியான துன்பந் தரத்தக்க பிணியுண்டாகி உடுக்கத்துணியுமின்றிசாப்பிடுதற்குரிய அன்னமும் கிடையாமல் வெல்லம்போல் அருமையாகும் எ-று. 66



மெய்யதைச் சொல்வாராகில் விளங்கிடு மேலுநன்மை,
வையக மதனைக்கொள்வார் மனிதரிற் றேவ ராவர்,
பொய்யதைச் சொல்வா ராகிற் போசன மற்பமாகும்,
நொய்யரிசியர்க ளென்று நோக்கிடா ரறிவுள்ளோரே.

இ-ள். மெய்சொல்வோரிடத்து நன்மையேவிளங்கும் உலகத்தவரும் அவருடைய வார்த்தைகளை ஒப்புக்கொள்வார்கள். மானிடரில் அவரே தெய்வமாவார் பொய்பேசுபவரிடத்து உணவும் அற்பமாகும் நொய்யரிசி கொதிதாளாதென்னும் பழமொழிபோலப் பெருந்தன்மையுடையவர்க ளல்லவென்று மதித்து அறிவுடையோர்களும் அவரைப்பாரார்கள் எ-று. 67

சந்தக் கலிவிருத்தம்.

தந்தையுரை கட்டினவன் றாயுரை யிகழ்ந்தோன்
அந்தமுறு தேசிகர்த மாணையை மறந்தோன்
சந்தமுறு வேதநெறி மாறினவ னால்வர்
செந்தழலில் வாயினிடை சேர்வதுமெய் கண்டீர்.

இ-ள். தகப்பன்சொல்லைத் தள்ளிநடந்தவன், தாய் வார்த்தையை இகழ்ச்சிசெய்தவன், அழகிய குருவினாணையைமறந்தவன், சந்தமுள்ள வேதநெறிகளைக் கடந்தவனாகிய இந்நால்வரும்சிவந்த அக்கினிவாயின் கண்ணடைவது உண்மையென்றறியக்கடவீராக எ-று. 68

அறுசீரடியாசிரிய விருத்தம்.

நாரிகள் வழக்க தாயி னடுவறிந் துரைத்தார் சுத்தர்
ஏரிபோற்பெருகிமண்மே லிருகணும்விளங்கிவாழ்வார்
ஓரமே சொல்வா ராகி லோங்கிய கிளையு மாண்டு
தீரவே கண்கள் ரெண்டுந் தெரியாது போவர் தாமே.

இ-ள் ஏழைப்பெண்கள் முறையிட்ட வழக்குகளாயிருக்கினும் நடுநிலைமையறிந்து நியாயம் சொல்பவரே பரிசுத்தர் அவர்கள் பெரிய தடாகம் போல்பெருகி பூமியின்மேல் இரண்டு கண்ணும் பிரகாசித்து வாழ்வார்

கள், பட்சபாதமாய்ச் சொல்லுவரேல் அவர்கள் சுற்றமுமிழந்து இருவிழிகளுந் தெரியாத குருடராய் மயங்கி வருந்துவார்கள் எ-று. 69

முலைகலங்கூறல்.

அப்புறச்சிவந்த வாயா டேபஞ் சணையின்மீதில், ஒப்புறக் கணவனோடே போர்லீலை செய்யும்போது, கற்பகஞ்சேர்ந்தமார்பிற் கனதனமிரண்டுந்தைத்தே, அப்புறமுருவிற்றென்றே யக்கைபாற்றடவிப்பார்த்தாள்.

இ-ள் பவளம்போன்ற சிவந்தவாயையுடையவள் பரிசுத்தமான பஞ்சணையின்மேல் தன் கணவனோடு ஒப்பற்ற ஒருவகைக் கலவிசெய்யுங் காலத்தில், பரதாரகமனமென்பதைச் சற்றும்நினையாத தன் நாயகனது மார்பில் பருத்த தன் முலைகளிரண்டுந்தைத்துப் பின்புறம் ஊடுருவிப் போய்விட்டதென்று தன்னழகிய கைகளாற் றடவிப்பார்த்தாள் எ-று. 70

வரிநீ ரிருந்தபோதங் கிருந்தன பட்சியெல்லா
மாரிநீர் மறுத்தபோதப் பறவையங்கிருப்பதுண்டோ
பாரினை யாளும்வேந்தன் பட்சமு மறந்தபோதே
யாருமே நிலையில்லாம லவரவ ரேகுவாரே.

இ-ள் தடாகத்தில் ஜலமிருக்கும்போது பட்சிகளெல்லாம் வந்துகூடியிருந்தன அந்நீர் வற்றியபோது பட்சிகள் அங்கிருப்பதுண்டோ (அதுபோல) உலகத்தையாளும் அரசன் பட்சத்தை மறந்தபோது ஒருவரும்நிலையில்லாமல் அவரவர்கள் பட்சமுள்ள விடந்தேடி செல்வார்கள் எ-று. 71

சந்தக்கழிநெடில் விருத்தம்.

மண்ணார்சட்டிகாத்தேந்தி மறநாய் கௌவுங்காலினராம், அண்ணாந்தேங்கி யிருப்பாரை யறிந்தோமறிந்தோ மம்மம்மா, பண்ணார்மொழியார் பாலடிசில்பைம் பொற்



கலத்திற் பரிந்தூட்ட உண்ணா நின்றபோதொருவர்க் குதவா மாந்தரிவர்தாமே.

இ-ள் கையில் மண்சட்டியேந்தி மறநாய் கௌவும் லட்சணமுடைய காலுள்ளவராய் எங்கு அன்னங் கிடைக்குமோவென்று ஏங்கி யண்ணாந்திருக்கின்றவர்களை அம்மம்மா கண்டோம் கண்டோம் அவர்யாரெனில் இராகம்போன்ற வார்த்தையுடைய மங்கையர்கள் பொன்கலத்தில் பாலொடு கலந்த அன்னத்தை மிக அன்போடூட்ட உண்ணுஞ் சமயத்தில் ஒருவருக்கும் கொடாத உலுத்தர்களே எ-று. 72

மண்டலத்தோர்கள் செய்த பாவம் மன்னவரைச்சேரும், திண்டிறன் மன்னர்செய்ததீங்கு மந்திரியைச்சேருந், தொண்டர்கள் செய்ததோஷந் தொடர்ந்துதங் குருவைச்சேருங், கண்டனமொழியாள் செய்த கன்மமுங் கணவர்க்காமே.

இ-ள் உலகத்தவர்கள் செய்த பாவம் அரசனைச்சாரும், வலிமையுள்ள அரசர்கள் செய்ததீமை அமைச்ரும், அடியார்கள் செய்தகுற்றம் தன் ஆசிரியனைப்பற்றும், கற்கண்டுபோலும் மொழியையுடைய மங்கையர்கள் செய்தபாவம் புருடர்களுக்காகும் எ-று.

நற்குண முடையவேந்தை நயந்துசேவித்த லொன்று, பொற்புடை மகளிரோடு பொருந்தியே வாழ்தலொன்று, பற்பலரோடு நன்னூல் பகர்ந்து வாசித்த லொன்று, சொற்பெறு மிவைகண் மூன்று மிம்மையிற்சொர்க்கந் தானே.

இ-ள் நல்லகுணமுடைய ராஜர்களைவிரும்பி தரிசித்தலும், அழகுடைய ஸ்திரீகளோடு கூடிவாழ்தலும், கல்விமான்களான நல்லாசிரியனையடுத்து தன்னையொத்த மாணாக்கர் பலரோடும் நல்ல நூல்களைக் கேட்டுச் சந்தேகமறப்பயின்று கற்றுக் கொள்ளுதலுமாகிய இந்த மூன்று

காரியங்களும் இகத்தில் அனுபவிக்கத் தக்க சுவர்க்க போகங்களாம் எ-று. 74

வேறு.

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்க
ணிமலன் றுளைக்
கிட்டையிலே கொடுத்து முத்தி பெறுமளவும்
பெரியசுகங் கிடைக்குங்காம
வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்பேசி
விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்து நடுக்கட்டையிலேகிடத்து
மட்டுங் கவலைதானே.

இ-ள் சதாநிட்டைபுரிந்து பற்றுநீக்கி, மனதின்கண் துறவடைந்த பெரியோர்களெல்லாம் பரபதியின் பதத்தைத் துதிக்கக் கிடைத்ததுமுதல், மோட்சத்தை அடையும் வரையில், பெரிதான ஆனந்தத்தை யடைவார்கள். கன்னியர்கள் காபமென்னும் வெப்பத்திலே புத்திமயங்கிக் கிடப்பவர்களெல்லாம் சிறுமியர்க்குவிவாக முறைபேசி விருப்பத்தோடுதாலி சட்டுவது முதல் சுடுகாட்டிலடுக்கிய கட்டைகளின் நடுமத்தியில் கொண்டுபோய் வைக்கும் வரையில் துன்பமே யனுபவிப்பார்கள். 75

தலைவன் வருந்தல்.

எழுசீர் விருத்தம்.

அன்னம் பழித்தநடை யாலம்பழித்தவிழி யமுதம்
பழித்த மொழிகள்
பொன்னம் பெருத்தமுலை கன்னங்கறுத்தகுழல்
சின்னஞ் சிறுத்தவிடைபெண்
என்னெஞ்சுருக்கவவ டன்னெஞ்சு கற்றகலை யென்னென்
றுரைப்ப தினிஞன்
சின்னஞ் சிறுக்கியவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங்களுக் கபயமே



இ-ள். அன்னத்தையிகழ்ந்த நடையையும், விஷத்தை சித்தித்த கண்களையும், அமிர்தத்தைப்பழித்த சொற்களையும், பொன்போலுந் தேமற்படர்ந்து பருந்தமுலைகளையும், கருநிறமாக இருண்ட கூந்தலினையும், கண்டவர்கள் அதினுட்பமென்று மதிக்கும்படி மிகவுஞ் சிறுத்த இடையினையுமுடைய பெண்ணுளவள் எனது மனதை உருக்க அவள் தன்னெஞ்சிற் கற்றுக்கொண்ட சாத்திர வல்லபத்தை இனி நானென்னவென்று சொல்லுவேன் அச்சிறுக்கியால் நேரிட்ட வில்லங்கங்களுக்குத் தெய்வத்தைநோக்கி முறையிடுவதன்றி யென்னால் செய்யத்தக்க கதியாது எ-று. 76

எண்சீரடியாசிரிய விருத்தம்.

ஆவின மழை பொழிய யில்லம்விழ வகத்தினள்
நோய் தனில்வருந்த வடிமைசாக
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட வழியிலே
கடன்காரர் மறித்துக் கொள்ள
கோவேந்த ருழுதுண்ட கடமைகேட்கக் குருக்கள்வந்து
தட்சணைக்குக் குறுக்கே நிற்கப்
பாவாணர் கவிபாடிப் பரிசுகேட்கப் பாவிமகன்
படுந்துயரம் பார்க்கொ ணுதே.

இ-ள் பசு கன்றைப்பெற, மழைவிடாது பெய்ய வீடு இடிந்துவிழ, வீட்டுக்குரிய மனைவி கெற்பவேதனைப்பட, வேலையாள் இறக்க, ஈரங்காய்ந்து விடுகிறதென்று விதைக்க விரைகொண்டோட, கடன்காரர் மறித்துக் கொள்ள, அச்சமயத்தில் வேளாண்மைசெய்து சாப்பிட்டபூமிகளின் தீர்வையை தலைமையான அரசர்கேட்க அதுகாலை குருக்களானவரும் குறுக்கேநின்று தட்சணை கேட்க, கவிகளைப்பாடி வித்துவான்கள் சன்மானஞ்செய்யும்படிவினவ, பாவியகன் அடையும் துன்பப்பார்க்கச் சகிக்காது எ-று.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

தாய்பகை பிறர்நட்பானுகிற் றந்தையும் குணவானு கில், வாய்ப்பகை மனைவியாரும் மாவழகுற்றபோது, பேய்பகை பிள்ளைதானும் பெருமைநூல் கல்லாவிட்டால் சேய்பகை யொருவர்க்காகு மென்றனர் தெளிந்த நூலோர்.

இ-ள் பிறருக்கு அனுகூலமாகவுந் தனக்குப்பகையா கவுமிருக்கின்ற மாதாவும், அதிகக் கடன்பட்ட பிதா வும், மிகுந்த அழகுள்ளவளாய்த் தனக்குவந்த மனைவி யும், பெருமையான சாஸ்திரங்களைக் கற்றுக்கொள்ளாத பிள்ளையும், ஒருவனுக்குக் கிடைக்குமாகில் அவன் யாவ ருக்கும் பகையுடையபவனென்றே நன்றாய் அறிந்த கிரந் தகர்த்தர்கள் சொல்லுவார்கள் எ-று. 78

நிலைதளர்ந் திட்டபோது நீணிலத் துறவுமில்லை
சலமிருந் தகன்றபோது தாமரைக் கருக்கன்கூற்றம்
பலவன மெறியும்போது பற்றுதீக் குறவாங்காற்று
மெலிவது விளக்கேயாகில் மீண்டுமக் காற்றேகூற்றும்.

இ-ள். நீர்நிறைந்த தடாகத்திலுள்ள தாமரைப் புட் பத்திற்கு அக்காலத்தில் சிநேகனுயிருந்த சூரியனே நீர்வற்றிய காலத்தில் அத்தாமரைக்குச் சத்துருவாய் நாசஞ்செய்வான், அடர்ந்த பெருங்காடுகள் தீப்பற்றி யெரியும்போது அப்பெரு நெருப்புக்கு வாயுவாகிய காற்றுதவியாக நிற்கும் அவ்விதநெருப்பு தன்னளவிற் சுருங்கி யொருதீபத்தளவாய் நின்றபோது அக்கா ற்றே அத்தீபத்திற்கு யமனுகும் அதுபோல செல்வம் நிறைந்த காலத்தில் நெருங்கிய உறவினராயிருந்தவர் களும், அதுதவறியகாலத்தில் பந்துத்துவநீங்கிப் பகை வராவார்கள். எ-று. 79

படுத்தபா வாணர்தக்கோர் மறையவரிரப் போர்க் கெல்லாங், கொடுத்துயர் வறுமையுற்றார் கொடாது வாழ்ந்தவரார் மண்மேல், எடுத்துநா டுண்டாரீரு மெ



டாதகாட் டகத்துநீரு, மடுத்தகோ டையிலே வற்றி யல் லதிற் பெருகுந் தானே.

இ-ள் நெருங்கிய வித்துவான்கள் மேலானவர்கள்வே தியர்கள் யாசிப்போர்கள் இவர்களுக்கு கொடுத்ததினுல் யார்தரித்திரத்தையடைந்தார்கள். கொடாமல் பூமியின் மேலிருந்து யார் வாழ்ந்தனர் நாட்டில்யாவரும் எடுத் துண்ணுத காட்டினிடத்துள்ள ஏரி நீரும், பொருந்திய கோடைகாலத்தில் வற்றியும் கார்காலத்தில் ஜலம்நிறைந் தும் பெருகுமல்லவா எ-று. 80

வேறு

உணங்கி யொருகான் முடமாகியோர் கண்ணிழந்து செவியின்றி, வணங்குநெடிவா லறப்புண்டு வயிறுமுதுகி லொட்டி, அணங்குநலிப மூப்பெய்திய கல்வாயோடு கழுத்தேதக்கி, சுணங்கன் முடுவல்பின் சென்றால்யாதே மக் காமன் றுயர்செய்யான்.

இ-ள் வாட்டமுற்றும் எருகால் முடமாகியும், ஒரு கண் குருடடைந்தும், காதறுப்புண்டும், நீண்டு வளை யும் வால் அறுபட்டும், உணவின்றி வயிறு முதுகோ டொட்டியும், அழகுகெட்டு முதுமைவாழ்ந்தும் அகன்ற வாயினுடைய கலவடைக் கழுத்தில் மாட்டிக்கொண்டு திரியும் ஆண்நாயானது ஒருபெண்ணுயின் பின் காமத் தாலோடித் திரியுமாகில் மற்றை எவர்களை மன்மதன் துன்பஞ் செய்யான் எ-று 81

எழுசீரடியாசிரிய விருத்தம்.

கன்மனம் பார்ப்பார் தங்களைப்படைத்து காகத்தை
யென்செயப் படைத்தாய்
துன்மதி வணிகர் தங்களைப்படைத்துச் சோரரை
யெனசெயப் படைத்தாய்
வன்மன வடுகர் தங்களைப் படைத்து வானர
மென்செயப் படைத்தாய்

நன்மனைதோறும் பெண்களைப் படைத்து நமனை ...
யென்செயப் படைத்தனையே.

இ-ள் ஓ நான்முகனே கருங்கல்லைப்போன்ற நெஞ்சத்தையுடைய பிராமணரைப்படைத்திருந்தும் காகத்தையும், திருப்புத்தியுள்ள வணிகர்களைப் படைத்திருந்தும் திருடர்களையும், வலிய நெஞ்சத்தையுடைய வடுகரைப்படைத்திருந்தும் வானரங்களையும் நல்லவீடுகள் தோறும் பெண்களைப்படைத்தும் எமனையும் யாதுகாரணத்துக்காக படைபித்தாய் எ-று. 82

கலிவிருத்தம்.

உண்ணல் பூச்சூடனெஞ் சுவத்த லொப்பனை
பண்ண லெல்லாமவர் பார்க்கவே யன்றோ
யண்ணல் தன்பிரிவினை யறிந்துந் தோழிநீ
மண்ணவந் தனையிது மடமையாகுமால்

இ-ள் என்னுயிர்பாங்கியே உலகத்தில் கற்பிற் சிறந்த பெண்கள், மதுரமான ஆகாரங்களை யுட்கொள்ளுதலும், பரிமளமிகுந்த புட்பங்களை முடித்தலும் மனமகிழ்ச்சி முகமலர்ச்சிகளோ டிருத்தலும், மற்றும் பலவிதமான திவ்ய வஸ்திராபரணங்களால் தன்னை யலங்கரித்துக் கொள்ளுதலுமாகிய இவைகளெல்லாம் தத்தமகணவர்கள் கண்டுகளிப்பதற்காகவே யல்லவோ (அவ்வாறிருக்க) பெருமையிற் சிறந்தவெனது நாயகன்தற்சமயம் என்னை விட்டுப் பிரிந்திருப்பதுனக்குத் தெரிந்திருந்தும் என்னை யலங்காரஞ் செய்வதற்காக நீவந்தது உன்னறியாமையினாலல்லவா எ-று 83

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கோளரி யடர்ந்த காட்டில் குறங்கில்வைத் தமுத மூட்டித், தோளினிற் றாக்கிவைத்துச் சுமந்து பேரு வளர்த்த, ஆளனைக் கிணற்றிற் றள்ளி யழகிலா முடவர் சேர்ந்தாள், காளநேர் கண்ணினாளைக் கனவிலும் நம்பொணாதே.



இ-ள். வெவ்விய சிங்கங்கள் வாழும் கானகத்தில் துடையிலிருத்தி யன்னமூட்டித் தோளிற்றாக்கிச் சுமந்து அன்பாக வளர்ந்துவந்த புருடனையும் கிணற்றிற் றள்ளி அழகில்லாத முடவனை ஒருத்தி கூடினாள். (ஆதலால்) விடத்துக்கொப்பான கண்ணுடையவளை கனவிலும் நம்பத்தகாது எ-று. 84

கொச்சகக் கலிப்பா.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பணியும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறு வயதளவும்
பேய்கொண்டா லுங்கொளலாம்பெண்கொள்ளலாகாதே.

இ-ள். சிவந்த நிறத்தைக்கொண்டு விளங்குந் தாமரைமலரிலுள்ள பிரமதேவனும், ஆதிசேடனைப் பாயாகக் கொண்ட மகாவிஷ்ணுவும் வணங்கித் துதிக்கும் படியாகத் திருப்பட்டீச்சுரத்தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானே (ஒருவன்) நூறுவயதளவும் வியாதியையும் கொள்ளலாம், பேயையுங்கொள்ளலாம், பெண்களைக் கொள்ளல் ஆகாது எ-று. 85

கஸ்தூரி முதலிய வாசனை வஸ்துக்களை விற்பனை செய்பவர் ஒருவேடன் குறியிருப்பிற்சென்று தமது வர்த்தகத்தைக் காட்டியபோது நடந்த சம்பாஷணை.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

நாணமென்பது மணங்கமழ்பொருளது நாவினுண் பதுவேசொல், ஊனுணங்குவோன் மடந்தையாணிவதே யுயர்முலைத் தலைக்கோட்டில், ஆனதங்கது பூசினல் வீங்குவதையுமோ வெனக்கேட்கக், கானவேட்டுவச் சேரிவிட்டகன்றனர் கடிகமழ் விலைவாணர்.

இ-ள். (வர்த்தகர்) நாணமென்பது வாசனைகமழும் பொருளென்ன, (வேடர்) நாவினால் சுவைத்துச் சாப்பிடத்தக்க பதார்த்தமோ சொல்லென்ன (வர்த்தகன்) ஊனுன்பவனே ஸ்திரீகள் விசாலித்த முலையினிடத்து

அணிந்துகொள்ளும் வாசனைத்திரவியம் என்ன (வேடர்) அதைப்பூசில் முலைவிக்கம் அழுங்கிவிடுமோ வென்ன, (வர்த்தகன்) அக்கானகத்திலுள்ள வேடர் குடியிருப்பை விட்டு நீங்கினர் எ-று. 86

கலி நிலைத்துறை.

கொண்டுவின் படர்கரு டன்வாய்க்கொடுவரிநாகம்
விண்டநா கத்தின்வாயினில் வெகுண்டவன் தேரை
மண்டிதே ரையின்வா யினிலகப் படுவண்டு
வண்டுதே னுகரின்பமே மானிட வின்பம்.

இ-ள். கருடன் வாயினிடத் தகப்பட்டு ஆகாயத்திற் கொண்டுசெல்லும் நீண்டநாகமும், அந்நாகத்தின் வாயிலகப்பட்ட தேரையும், அத்தேரையின் வாயிலகப்பட்ட வண்டும், அத்தகைய வண்டானது மதுவையுண்ணும் இன்பத்திற்கொப்பேயாகும் இவ்வுலகத்திலுள்ள மனிதர்களனுபவிக்கும் இன்பங்கள் எ-று. 87

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கற்பூர பாத்திகட்டி சஸ்தூரி யெருப்போட்டுக்
கமழ்நீர் பாச்சிப்
பொற்பூர வுள்ளியினை விதைத்தாலு மதின்குணத்தைப்
பொருந்தக் காட்டும
சொற்பேதை யருக்கறிவிங் கினிதாக வருமெனவே
சொல்லி னாலு
நற்போதம் வாராதாங் கவர்குணமே மேலாக
நடக்குந் தானே.

இ-ள். கற்பூரத்தால் வரப்புகளிட்டுக் கஸ்தூரியையே எருவாகத்தூவி, வாசனைநீரையே பாச்சி அழகுண்டாக ஈருள்ளியை அதில் நட்டுவைத்தாலும் அதின் குணத்தையே செவ்வையாய்க் காண்பிக்கும் சொல்லத்தக்க அறிவில்லாதவர்க்கு இனிமையான அறிவுவருமென்று எவ்வளவு சொன்னாலும் நல்ல குணமானது சற்றும் வராது அப்போதும் அவர்கள் தீயகுணத்தையே மேலாகக்காட்டுவர் எ-று. 88



கண்ணயப்புரைத்தல்.

கலி விருத்தம்.

தண்டு லாவிய தாமரைப் பொய்கையில்
மொண்டு நீரை முகத்தரு கேந்தினாள்
கெண்டை கெண்டையென் றக்கரை யேறினாள்
கெண்டை காண்கிலள் நின்று தயங்கினாள்.

இ-ள். கொடிகளமைந்த தாமரை தடாகத்திலுள்ள தண்ணீரைக் கையால்முகந்து ஒருமங்கை தன் முகத்தினருகே யேந்திப்பார்த்தாள் (அதனுள் தெரிந்த கண்ணிழலைப்பார்த்து, கெண்டை கெண்டையென்று கூவிக்கொண்டே கரையிலேறிப் பார்த்தபொழுது அக்கெண்டைமீனைக் காணாமல் நின்று மயங்கினாள் எ-று. 89

வருவசந்தனக் குழம்பொடு நறுஞ்சுவை நலம்பெற வணிந்தாலுஞ், சருவசந்தேக மனமுடை மாதரைத் தழுதலுமாகாதே, பருவதங்கள்போற் பலபல நவமணிப் பைம்பொனை யீந்தாலும், செருவமிஞ்சிய மானிடர் தோழமை கிட்டாலுமாகாதே.

இ-ள். பொருந்திய சந்தனக்குழம்பு முதலிய வாசனைத் திரவியங்களையும், பலவித சுவையுணவுகளையும் அழகுபெறச் சேகரித்துத் தந்தாலும், எதிலுஞ் சந்தேகாஸ்பதமுண்டாக நடக்கும் மாதர்களை யணைதல் தகாது மலையளவாகிய அநேக நவரத்தினங்கள் அழுத்திய பசிய பொன்னாபரணங்களைக் கொடுத்தாலும் செருவம் மிகுதியுள்ள மனிதர்களின் சினேகம் எவ்வளவும் கொள்ளுதல் கூடாது எ-து. 90

தலைவி வனப்புரைத்தல்.

வேறு.

கிலத்தினிற் சுழியின்மூழ்கி நின்றவ டன்னைநேரே
குலத்தலை மஞ்ஞைகண்டு கூவெனக் காவிலேக
முலைத்தலை யதனைக்கண்டு மும்மதக் கரிவந்துற்ற
தலைத்தலை சிங்கமென்றக் களிறுகண் டேகிற்றம்மா.

இ-ள். பூமியினிடத்து ஜலத்தில் முழுகுகின்ற ஒரு மங்கையை கூட்டமாயிருந்த மயில்கள் நேரே பார்த்தது, அவள் சாயலுக்குப் பயந்து கூவென்றலறி ஒருசோலையிற்புகுந்தது அவள் முலைச்சிகரத்தைக்கண்டு மும்மதங்களைப் பொழியாநின்ற யானைகள் தங்களினமென்றோடி வந்து அவளிடையாகிய சிங்கத்தைக் கண்டு பயந்து ஓடிப்போயிற்று எ-று. 91

அற்பசந்தோஷிகளின் இயல்பைப்பற்றிக் கூறியது.

கரியொரு திங்களாறு கானவன் மூன்றுநாளும்
இருதலைப் புற்றில்நாக மின்றுண்ணு மிரையீதென்று
விரிதலை வேடன்கையில் விற்குதை நரம்பைக்கவ்வி
நரியனார் பட்டபாடு நாளைநாம் படவேபோறும்.

இ-ள். ஒருவேடன் யானையின்மீது பாணப்பிரயோகம் பண்ணித் தானொரு நாகத்தாற்கடியுண்டு அந்நாகத்தின் மீதே விழுந்து யானையுந்தானும் நாகமும் இறந்து கிடக்கக்கண்ட ஒரு நரி யானையோ ஆறுமாதத்துணவாகும், வேடனோ மூன்றுநாட் பொழுதுபோகும் புற்றுநாகமோ இன்றுண்ணும் இரையாகும் என்று சந்தோஷித்துக் கொண்டே விரிந்த தலையையுடைய வேடனது கையிலுள்ள வில்லின்குதை நரம்பைக்கடித்த மாத்திரத்தில் அது அறுந்து அதனால் அந்நரி இறந்தது. (அதுபோலவே) அற்ப சந்தோஷிகள் வீணாசைகொண்டு துன்பப்படுவார்கள் எ-று. 92

வேறு.

பூதலத்தின் மானிடராய்ப் பிறப்பதரி தெனப்புகல்வர்
பிறந்தோர் தாமும்
ஆதிமறை நூலின்முறை யருள்கீர்த்தி யாந்தலங்க
ளன்பாய்ச் சென்று
நீதிவழு வாதவகை வழக்குரைத்து நல்லோரை
நேசங் கொண்டு
காதவழி பேரில்லார் கழுதையெனப் பாரிலுள்ளோர்
கருது வாரே.



இ-ள். உலகத்தில் மானிடராய்ப் பிறப்பதரிதெனச் சொல்வார்கள், அப்படிப்பிறந்தாலும் முதன்மையான வேதசாஸ்திரங்களின் முறைப்படி கிருபை, புகழ் இவற்றை யுடையவராய் ஸ்தலயாத்திரை செய்து நியாயந்தவறாதபடி வழக்குகள் தீர்த்து பெரியோர்களுக்கு வழிபாடு செய்து நல்லவர்களென்று காதவழித் தூரமேனும் பேர் பெற்று இராதவர்களைக் கழுதை பிறப்பென்றே யாவருமிகழ்வார்கள் எ-று. 93

வேறு.

ஆரம்பூண்ட மணிமார்பா வயோதிக்கரசே யண்ணா கேள், ஈரமிருக்க மரமிருக்க இலைகளுதிர்ந்த வாறேது. வாரங்கொண்டு வழக்குரைத்து மண்மேல்நின்று வலி பேசி, ஓரஞ்சொன்ன குடியதுபோ லுதிர்ந்து கிடக்குந் தம்பியரே.

இ-ள். மாலைபணிந்த அழகிய மார்பையுடைய அயோத்தியையாளும் மகாராஜனாகிய அண்ணாவே கேட்பாயாக. ஈரமிருக்க மரமிருக்க அதின் இலைகள் மட்டும் உதிர்ந்து போன காரணம் யாதென்று தம்பியானவன் கேட்க, அதற்கு அவன் பூமிமேலிருந்து பட்சபாதகமாய்த் தனது வல்லமையினால் வழக்குத்தீர்த்து ஓரவஞ்சனை செய்பவர் குடிபோல உதிர்ந்து கிடக்கின்றது தம்பியென்றுரைத்தான் எ-று. 94

அறுசீரடியாசிரிய விருத்தம்.

* வல்லியந் தனைக்கண்டஞ்சி மரந்தனிலேறும்வேடன்
கொல்லியபசியைத்தீர்த்து ரட்சித்த குரங்கைக்கொன்
றான், நல்லவன் றனக்குச்செய்த நலமது மிக்கதாகும்,
புல்லர்க டமக்குச்செய்தா லுயிர்தனைப் போக்குவாரே.

இ-ள். புலியைக்கண்டு பயந்து ஓர் விருட்சத்திலேறியிருந்த வேடனுக்கு உயிர் நீங்கத்தக்க மிகுந்த பசியைத் தீர்த்து ரட்சித்த குரங்கை அவ்வேடனே கொன்றான்

* இக்கதை கபோததாக்கியத்தி லுள்ளது.

(ஆதலால்) நல்லோருக்குச்செய்த உதவி மிகுதியான நன்மையேதரும். அற்பர்களுக்குச்செய்த உதவி செய்தவனுக்கே மிகுந்த அபாயமுண்டாக்கும். 95

தன்மானங் குலமானந் தன்னேவந் தடைந்தவுயிர்
தங்கண் மானம்
என்மான மாகிலென்ன வெல்லவருட் சரியெனவே
யெண்ணம் போந்து
நன்மானம் வைத்தெந்த நாளுமவர் தங்களுக்கு
நன்மை செய்வோர்
மன்மானி யடைந்தோரைக் காக்கின்ற வள்ளலென
வழுத்த லாமே.

இ-ள் தான் பிறந்த ஜாதி யபிமானம், தன்னிடம் வந்து அடைந்தவர்களுடைய உயிர்போன்ற மானம் முதலியவைகளையும், தன்னுடையமானத்துக்குச் சமானமாகக்கருதி நல்ல அபிமானம் வைத்து எந்தக்காலத்திலும் நன்மை செய்யத்தக்கவர்கள் யாரோ அவர்களையே பொருந்திய மானுபிமான முள்ளவர்கள் அபயமென்றடைந்தவர்களை இரட்சிக்கத்தக்க வள்ளல்களென்று சொல்லுவார்கள் எ-று. 96

தன்னைத்தான் புகழ்வோருந் தன்குலமே பெரிதெனவே
தான்சொல் வோரும்
பொன்னைத்தான் றேடியறம் புரியாம லருள்காத்துப்
பொன்றி னேரு
மின்னைப்போன் மனையாளை விட்டில்வைத்து வேசைசுகம்
விரும்பு வோரும்
அன்னைபிதா பாவலரைப் பகைப்போரு மறிவில்லாக்
கசட ராமே.

இ-ள். தன்னையே புகழ்கின்றவர்களும், தன் ஜாதியையே பெரிதென் றுரைப்பவர்களும், பொருளைத் தேடி தருமஞ்செய்யாமல் புதைத்துவைத் திறப்பவர்களும், மின்னலைப்போலும் (தேககாந்தியுடைய) மனைவியை விட்டில்வைத்துப் பரத்தையர் போகத்தை இச்சிக்கின்றவர்களும், தாய்தந்தை வித்வான்கள் முதலியோரை விரோதித்துக் கொள்பவர்களுமாகிய விவர்கள் புத்தியில்லாத கீழ்மக்களாவர்கள் எ-று. 97



பெண்டுகள்சொற் கேட்கின்ற பேயரெனுங்குணமூடப்
பேடி லோபர்
முண்டைகளுக் கிணையில்லா முனைவீரர் புருடரென
மொழி யொணுதே
உண்டுலக முதிர்ப்பாருள் கீர்த்தியற்ற மின்னதென
முணர்வே யில்லார்
அண்டினவர் தமைக்கெடுப்பா ரழிவழக்கேசெல்வதவ
ரறிவு தானே.

இ-ள். மங்கையர் சொற்களைக்கேட்கின்ற பேயர்களாகிய குணங்கெட்ட பேடியனைய உலோபிகளுக்கும் விதவைகளுக்கும் ஒப்புரைக்கக் கூடாத சுத்தவீரர்களுமாகிய விவர்களையும், ஆண் தன்மையையுடையவரெனச் சொல்லக்கூடாது, உலகத்திற் பிறந்தவர்களும் புகழும் தருமமும் இன்னதென்று ஆராய்ந்து அறியாதவர்களே அடுத்தவர்களைக் கெடுப்பவராவார் நியாயத்தைவிட்டு நியாயவிரோதமாகப் பேசுவதே அவர்கள் புத்தியாகும் எ-று. 98

பொல்லார்க்கு கல்விவரில் கெருவமுண்டா மதனோடு
பொருளுஞ் சேர்ந்தால்
சொல்லாதுஞ் சொல்லவைக்குஞ் சொற்சென்றாற்
குடிகெடுக்கத் துணிவர் கண்டாய்
நல்லோர்க்கிம் மூன்றுகுண முண்டாகி லருளதிக
ஞானமுண்டாம்
எல்லோர்க்கு முபகார ராயிருந்து பரகதியை
யெய்து வாரே.

இ-ள். துற்குணமுடையவர்களுக்குக் கல்வியுண்டாகில் கர்வம் அதிகப்படும், அக்கல்வியோடு செல்வமுங் கூடினல் சொல்லத்தகாத வார்த்தைகளையுஞ் சொல்லும்படிசெய்யும். தஞ்சொல் எங்குஞ் செல்லத் தகுந்ததாயிருந்தால் குடிகளைக்கெடுக்கவும் துணிவார்கள் நற்குண

முடையார்க்குக் கல்வி செல்வம்சொற்செல்லுதல் ஆகிய இந்தமூன்று முண்டாகில் அருளும் ஞானமும் பெற்று யாவருக்கும் உபகாரிகளாக இருந்து முத்தியடைவார்கள் எ-று. 99

தலைவி நலங்கூறல்-வேறு.

உந்தியின் சுழியின்கீழ்ச்சே ருரோமமாங் கரியநாகஞ்,
சந்திரனெனவே யெண்ணித் தையலாள் முகத்தை
நோக்க, மந்திரகிரிகள்விம்மி வழிமறித் திடுதல்கண்டு,
சிந்துரக் கயற்கணோடிச் செவிதனக்குரைத்ததம்மா.

இ-ள். உந்திச்சுழியாகிய நாபிக்கடுத்துள்ள உரோமமாகிய கரியநாகமானது (எனது தலைவியின்) வதனத்தைச் சந்திரனென்று கருதி மேல்நோக்க, முலைகளாகிய மந்தரமலைக ளொருங்கிவழியைத் தடுத்துக் கொள்ளுதலைப்பார்த்து, செவ்வரி பறந்த கயலைப் போலுங் கண்கள் ஓடி செவிகளுக்குச் சொல்லியது எ-று. 100

இதுவுமது.

மாகமா மேடைமீதில் மங்கைநின் றுலாவக்கண்டு,
ஏகமா மதியென்றெண்ணி யிராகுவந் துற்றபோது,
பாகுசேர் மொழியினாளும் பதறியே பாதம்வாங்கத்,
தோகைமா மயிலென்றெண்ணித் தொடர்ந்தரா மீண்டவன்றே

இ-ள். வானமளாவிய மேடைமீதில் (எனது தலைவியான) மங்கைப் பருவமுடையவள்நின்று உலாவுகையில் ஒப்பற்ற பூரணச்சந்திரனென்றுநினைத்து (நவக்கிரகத்திலொன்றாகி) இராகுவென்னுங் கரும் பாம்பானதுவந்து நெருங்கப் பால்போலும் மொழியையுடையாள் மனம் பதறித் தனது பாதங்கள் வருந்த நடக்கையில் அவள் சாயலைக்கண்டு தோகைகளையுடைய மயிலென எண்ணி அப்பாம்பு திரும்பிவிட்டது எ-று. 101

வேறு.

சலதாரை விழுநீருஞ் சாகரந்தன்னைச் சார்ந்தாற்,
குலமென்றே கொள்வதல்லாற் குரைகடல் வெறுத்ததுண்டோ, புலவர்கள் சபையிற்கூறும் புன்கவியாளர்
சார்ந்தால், நலமென்றே கொள்வதல்லால் நவில்வரோ
பெரியோர்குற்றம்.



இ-ள். சலதாரையில் ஒழுகும் (நாற்றமுள்ள) தண்ணீரும், சமுத்திரத்திற்புகுந்தால், அதை தன்னினமென்று ஏற்றுக்கொள்ளுமல்லாமல் வெறுத்துத்தள்ளுவதுண்டோ? இல்லை (அதுபோல்) பெரிய வித்துவான்கள் சபையில் (நிரம்பிய நூற்கேள்வி யில்லாத) அற்பகவிஞர்கள்வந்து சேர்ந்தாலும் கற்றவர்க ளென்று ஏற்றுக் கொள்ளுவரல்லாற் குற்றஞ் சொல்லார். எ-று 102

காரெனுங் குழல்கடப்பிக் கடுஞ்சிலை வாளிதப்பி
மேரென வளர்ந்துநின்ற வேழத்தின் கோடுதப்பித்
தாருறு கரியரோமச் சங்கிலி வழியேசென்று
சீரியனெனவளர்ந்த செல்வனல்குலிற்கைவைத்தான்

இ-ள். கூந்தலாகிய மேகத்துக்கும் (புருவமாகிய) வில்லம்புகளுக்கும் மகாமேருபோன்ற முலைகளாகிய யானைத்தந்தங்களுக்கும், தவறி உரோமமாகியசங்கிலியின்வழியே சென்று மேன்மையாய் வளர்ந்த செல்வத்தையுடைய எனது நாயகனானவன் அல்குலாகிய பாம்பு படத்திற் கரங்களைச் செலுத்தினான் எ-று. 102

உண்டதையொழிக்கும்வாச லோரிரண் டொழித்துமேலே, வண்டலு மழுக்குஞ்சேரு முதாமு மாறுவாசல்,
உண்டதனிருப்பைக்கண்டு பெருங்களியுள்ளங்கொண்டு,
கண்டனரினைஞ ரெல்லாங் கதியெனகருதுவாரே.

இ-ள். உண்ட உணவுகளை (ஜீரணிக்கச் செய்து) வெளியிற் றள்ளும், சூதவாயலைபடுத்து உவர்நீ ரொழுகிச் சேறனையவழுக்குத்திரண்ட இரத்தம் மாறாதவாசல் ஒன்றுண்டு அதனிருப்பைப் பார்த்து பெருத்த சந்தோஷத்தை மனதிற்கொண்டு வாலிபர்கள் இதுவேமோட்சமென்று கருதுகின்றார்கள் எ-று. 103

வேறு.

காந்தொருவன்கணைதொடுக்க மேற்பறக்கும் ராஜாளி
கருத்துங்கண்டே

உரந்துசிறு கானகத்தி லுயிர்ப்புறா பேடுதனக்
குரைக்குங் காலை
விரைந்துவிடந் தீண்டவுயிர் விடும்வேடன்கணையால்
வல்லூறும் வீழ்ந்த
தான்செயலே யாவதல்லாற் றன்செயலா லாவதுண்டோ
வறிவுள் ளோரே.

இ-ள், ஒரு காட்டில் ஒளித்திருந்து வலிய கணை தொடுக்கும் வேடனைக்கண்டு பயந்து பறந்த புறாக்க ளிரண்டின் ஆண் புறவானது பெட்டைப் புறவைப் பார்த்து நம்மைப் பட்சிக்கக்கருதி, பூமியில் வேடனிருக் கிறான், ஆகாயத்தில் இராஜாளிப்பட்சிப் பறக்கிறது யாதுசெய்வோமென்று விசனப்பட அந்தச்சமயத்தில் அவ்வேடனை புதரிலிருந்த பாம்பு கடித்து, அதனாலவன் இறக்க அவன் கைவில்லிலிருந்த அம்பு விடுபட்டு மேற் பறக்கும் இராஜாளியைக் கொன்று வீழ்த்தியதென்றால் எல்லாம் கடவுள் செயலா லாவதல்லால் தன் செயலா லொன்றுமாவதில்லை எ-று. 104

கொல்லுலை வேற்கயற்கண் கொவ்வையங் கனிவாய் மாதே, நல்லணி மெய்யிற்பூண்டு நாசிகாபரணமீதிற், சொல்லரிற் குன்றிதேடிச் சூடியதென்னோ வென்றான், மெல்லியம் கண்ணும் வாயும் புதைத்தனள் வெண்முத் தென்றாள்.

இ-ள். கொல்லனுலையிற் காச்சிக் கூர்மைசெய்த வே லாயுதமும், கெண்டைமீனையுமொத்த கண்களும் கொவ் வைப்பழம்போன்ற செவந்த வாயினையுமுள்ள பெண் ணே! நல்ல ஆபரணங்களை தேகத்திலணிந்து நாசியினா பரணத்தில் குற்றப்பொருந்திய குன்றிமணியைப் புனைந் தது யாதுகாரணம் என்ன? அம்மேன்மையை யுடைய வள் வெட்கித் தனது கண்ணையும் செவ்வாயையும மூடிக்கொண்டு வெள்ளைமுத்தெனறு சொன்னாள் எ-று.

தலைவன்கூற்று கலிவிருத்தம்

அருகிலிவ ளருகிலிவ ளருகில்வர வுருகுங்
கரியகுழன மேனியிவள் கானமயில் சாயல்



பெரியதன மிடைசிறிது பேதையிவ ளையோ
தெருவிலிவ ணின்றநிலை தெய்வமென லாமே.

இ-ள். கறுப்புநிறம் பொருந்திய கூந்தலையும் அழகிய மேனியையும், கானமயிலைப்போலுஞ்சாயலையும் பாரித்த முலைகளையும் சிறுத்த விடையினையுமுள்ள பெண்ணான வள் பக்கத்தில் வர மனமானதுருகும், ஐயோ! வீதி யில் இவள் நிற்கும் நிலைமை நோக்கில் தெய்வப் பெண் ணென்றே மயங்கிச்சொல்லுதல் வேண்டும் எ-று. 106

பாங்கி கூற்று வேறு.

அலகு வாள்விழி யாயிழை நன்னுதற்
றிலகங் கண்டெதிர் செஞ்சிலை மாரனுங்
கலக மேசெயுங் கண்ணிது வாமென
மலரம் பைந்தையும் வைத்து வணங்கினான்.

இ-ள். வாளாயுதத்தையொத்த கண்ணுடைய எங்கள் கன்னியினது நல்ல நெற்றியிலுள்ள பொட்டினழகை செவ்விய வில்லையுடைய மன்மதன் கண்டு கலகம் விளைக் கும் கண்ணேயென்று நினைத்து தன் மலரம்பு களைந் தையும் (அவன்முன்) வைத்து வணங்கினான் எ-று. 107

கலிநிலைத்துறை.

குரங்குநின்றுகூத்தாடிய கோலத்தைக்கண்டே
அரங்குமுனபுநாய் பாடிக்கொண் டாடியவதுபோல்
கரங்கணீட்டியே பேசியகசடரைக்கண்டு
சிரங்களாட்டியேமெச்சிடு மறிவிலார் செய்கை

இ-ள். குரங்கு கூத்தாடிநின்ற அழகைப்பார்த்து ஒரு நாய்தானும் அவ்வாறாடக்கருதி ஊளைப்பாட்டுடன் வீதி யில் ஆடியதுபோல கைகளை நீட்டிப்பேசும் மூடர்களைக் கண்டு மெச்சித் தலைகளை யாட்டித் தங்களைத் தாங்களே மெச்சிக் கொள்வது அறிவில்லார்தொழில் எ-று. 108

அறுசீரடியாசிரிய விருத்தம்.

வில்லது வளைந்ததென்று வேழமா றறங்கிற்றென்றும்,
வல்லியப்பதுங்கிற்றென்றும் வளர்கடாபிந்திற்றென்றும்,

புல்லர்தஞ் சொல்லுக்கஞ்சிப் பொறுத்தனர் பெரியோ ரென்றும், நல்லதென் றிருக்கவேண்டா நஞ்செனக்கருத லாமே.

இ-ள். வில்வளைந்து கொடுத்தல், யானை நித்திரைசெய் தல், புலி பதுங்குதல், கிடா பின்வாங்குதல், கீழ்மக்கள் சொல்லுக்குப் பயந்து பெரியோர் பொறுமையோடிருத் தல் இவைகள் யாவையும் நன்மையென்று நினைக்கக் கூடாது விஷமென்றே சிந்திக்கவேண்டும் எ-று. 109

சலந்தனிற்கிடக்குமாமை சலத்தைவிட் டகன்றபோது
கொலைபுரிவேடன்கண்டு கூரையிற்கொண்டுசெல்ல
வலிவினாலவனைவெல்ல வகையொன் றுமில்லையென்றே
தலையெலிகாகஞ்செய்த கதையெனவிளம்புவோமே.

இ-ள். தண்ணீரிலிருந்த ஓராமை கரையில்வந்த பொழுது அதைக் கொல்லுந் தொழிலையுடைய ஒருவே டன் பார்த்துப் பிடித்து வலையிலிட்டுக் கட்டிக்கொண்டு போக அந்த ஆமைக்குப் பிராண சினேகிதமாகவிருந்த ஒருமானும், எலியும், காகமும், தங்கள் வல்லமையினால் அவ்வேடனை ஜெயிக்க யாதொரு வகையாலுமுடியா தென்றுநினைத்து ஒருவித தந்திரத்தால் ஆமையைத் தப்புவித்த கதையேயாகும் நீசெய்தகாரியம் எ-று. 110

நிலமதிற் குணவான் றோன்றி னீள்குடித்தனரும் வாழ்வார், தலமெலாம் வாசந்தோன்றும் சந்தனமரத் திற் கொப்பாம், நலமிலாக் கயவன்றோன்றின் நன்குடித் தேசம் பாழாங், குலமெலாம் பழுதுசெய்யுங் கோடரிக் காம்பு நேராம்.

இ-ள். உலகத்தில் நல்ல குணமுடையவனாய் ஒருவன் பிறந்தால், அவனால் அவனது குலமுழுதும் வாழ்வை யடையும், சந்தனவிருக்ஷம்போல் எத்திசையினும் புகழ் மணக்கும், நன்மையில்லாக் கீழ்மகனுயுதித்தால் அவன் குலமும் தேசமும் பாழடையும், கோடரிக்காம்புபோல் தன்ஜாதிக்கும் ஈனங்களுண்டாக்குவான் எ-று. 111



விபசாரத்தைக் கைக்கொண்ட புருடபாரியர்களுக்
குள் நடந்த சம்பாஷணையை தலைவி
தோழிக்குக் கூறியது.

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

உயிரனை யானுடன் கலந்த வுளவறிந் திண்டெனை
மணந்தோ னுடன்றிச் செய்கை
செயலெனை யென்றிலை மறைகா யெனத் தனவா
தகலவிரு வகையுந் தீதென்
றயில் வழியாய் மயற்பொது ஆழ்வலி ததினும்
பெண்மதியே னதுவு மூழின்
இயலென வள்ளுவ ருரைத்தார் சான்றுநீ யெனப்
புகன்றே னின்புற் றானே.

இ-ள். வேல்போலுங் கூரிய கண்களையுடைய தோழி யே! எனது உயிரினுஞ்சிறந்த சோரநாயகனிடத்தில் நான் கூடிக்குலாவி வரும் மர்மத்தை எனது சொந்த நாயகனறிந்து இலைமறைவு காய்மறை வென்றில்லாமல் என்மேற் கோபங்கொண் டிப்படிப்பட்ட தகாதகாரியஞ் செய்யத் துணிந்தமைக்குக்காரணம் யாதென்று கேட்க, அப்போது நான் உண்டென்பதும் இல்லை யென்பது மாகிய விரண்டு காரியங்களும் குற்றமாகவே முடியுமென் றெனக்குள் யோசித்து, காமம் பொதுவென்று தலையி லெழுதிய வெழுத்துத் தவறாதென்றும் சொன்னேன். அவர் முன்னிலு மதிக கோபங்கொண்டு விதியை மதி யால் வெல்லக் கூடாதாவென்ன அதற்கு நான் ஐயோ என்புத்தி பெண்புத்தியல்லவா ஆண்மக்களுக் குள்ள சிற ந்த புத்தியும், ஊழின்படியே நடக்குமென்று பெரியோர் கட்டளையிட்டிருக்கின்றார்களே மேலும் இதற்குச்சாட்சி தாங்களே பிரத்தியட்சமாயிருக்க வேறு தேடுவானேன் என்றேன். அதைக்கேட்டு மனமகிழ்ந்தனர். இதை நீ யறிவாயாக எ-று. 113

நட்பிடைக் குய்யம்வைத்தார் பிறர்மனை நலத்தைச் செய்வார், நட்புடைக் காமத்தீபாற் கன்னியை விலக்கி

னோரும், அட்டடே னஞ்சுகின்றோ ராயுளுங்கொண்டு நின்று, குட்டநோய் நரகில் வீழ்ந்து குளிப்பவரிவர்கள் கண்டாய்.

இ-ள். சிநேகத்தில் வஞ்சகஞ்செய்தவரும், அயலான் மனைவி இன்பத்தை இச்சித்தவனும், காமாக்கினியால் வருந்துகின்ற கன்னியை அவளிஷ்டந்தணியக் கலவாதவரும், கொல்லுந்தொழிலை மேற்கொண்ட போர்க்களத்தில் பயந்தோடுபவரும் (ஆகிய இவர்கள்) குஷ்ட வியாதி யடைந்து நெடுநாள் உலகத்தில் துன்பத்தை யனுபவித்துப் பின்பு நரகத்தில் விழுவார்கள் எ-று. 114

மதியிலா மறையோன்மன்னன் மடந்தையை வேட்கையாலே, ருதுவதி காலந்தன்னிற் றோஷமென்றுரைத்தே யாற்றில், புதுமையா யெடுத்தபோது பெட்டியிற் புலிவாயாலே, அதிருடன் கடியுண்டன்றே யருநரகடைந்தான் மாதோ.

இ-ள். விவேகமற்ற ஒரு பிராமணன் தன்னிடத்துக் கல்வி பயின்றுவந்த இராஜகுமாரத்தியின் மீது விடா மோகங்கொண்டு அவள் புஷ்பவதியான காலம் மிசவுந் தோஷமுடையதென்றும். உடனே அவளைப் பேழையு ளடக்கஞ்செய்து நதி முதலிய நீரோட்டங்களில் விட்டுவிட வேண்டுமென்றும் அவள் தந்தையாகிய அரசனுக்குத்தெரிவித்து அவ்வாறே செய்வித்துப் பின்பு தான் அந்தப்பெட்டியைத் தேடிக்கொண்டு ஆற்றோரமாகச் சென்றோரிடத்தி லப்பெட்டியைக்கண்டு அதையெடுத்தாசையுடனே திறக்க, அதற்கு முன்னமே வேட்டையாடிவந்த வேறொரு அரசன் அப்பெட்டியைப் பார்த்தெடுத்துத் திறந்து, அதற்குள்ளிருந்த கன்னிகையை அழைத்துக்கொண்டு வேட்டையிலகப்பட்ட புலியை யதிற்போட்டுப் பூட்டிப் பழையபடி யாற்றில் விட்டுவிட்டானாதலால், அப்பெட்டிக்குள்ளிருந்த புலி யப்பிராமணனை யடித்துக்கொல்ல அதனாலிறந்து நரகத்தை யடைந்தான் எ-று. 115



மையது வல்லியம்வாழ் மலைக்குகை தனிற்புகுந்தே
ஐயமும் புலிக்குக்காட்டி யடவியிற் றுரத்துங்காலை
பையவே நரிக்கோளாலே படுபொரு ளுணரப்பட்ட
வெய்யவம் மிருகந்தானே கொன்றிட வீழ்ந்ததன்றே.

இ-ள். ஓர் ஆட்டுக்கிடாவானது புலியிருக்கும்படியான ஒரு குகைக்குட்புகுந்து அப்புலியை ஒருவிதமாய் மிரட்டிச் சந்தேகத்தைக் காட்டிக் காட்டின் வழியாய் விரட்டுகிறகாலத்தில் எதிரில்வந்த ஒரு நரியினகோளால் அப்புலியானது உண்மையைத் தெரிந்துக்கொண்டு அவ்வாட்டினமேல் பாய்ந்து கொல்ல ஆட்டுக்கிடா யிறந்தது எ-று.

வேறு.

மங்கைகைகேசி சொற்கேட்டு மன்னர்புகழ் தசரதனும்
மரண மானான்
செங்கமலச் சீதைசொல்லை சீராமன் கேட்டவுடன்
சென்றான் மான்பின்
தங்கையவள் சொற்கேட்ட ராவணனுங் கிளையோடு
தானு மாண்டான்
நங்கைசொற் கேட்பதெல்லாங் கேடுவரும் பேருலகோர்
நகைப்பர் தாமே.

இ-ள். அரசர்புகழும் தசரதன் கைகேசி யென்னும் மனைவியின் சொற்கேட்டு மரணமடைந்தான் ஸ்ரீராமபிரான் ஜானகி சொற்கேட்டு மான்பின்சென்று வருந்தினான். இராவணன் தன் தங்கையாகிய சூர்ப்பநகையின் சொற்கேட்டுத் தன் சுற்றத்தோடுமாண்டான். ஆதலால் ஸ்திரீகள் சொல்லைக் கேட்பதெல்லாம் துன்பத்திற்கேயிடமாகும் உலகத்தவரும நகைப்பார்கள். 117

வேறு.

* ஆதியா மிருவர்நட்புக் கவமதிப் புற்றவர்க்குள்
சூதினாற் கபடஞ்செய்து துணைபிரிந் திடுவரென்றால்
வேதியன் பலர்வாயில் வேசைதாய் பச்சைநாவி
பூதியகதை போலாகி யருநர கெய்துவாரே.

---

* இக்கதை சிந்தாமணியில் உள்ளது.

இ-ள். முதலில் ஒற்றுமையான சினேகத்தைக் கொண்டிருந்த இருவருள் ஒருவரை மற்றொருவர் அவமதிக்க வேண்டுமென்றெண்ணி அதற்குரிய வஞ்சகங்கள் பலவாகச்செய்து அதனால் பகைநேர்ந்து ஒருவரை விட்டொருவர் பிரிவது ஒரு தாசியானவள் தன் மகளோடு இணைபிரியாது கூடிக்குலாவிவந்த ஒரு பிராமணனுடைய குலத்தில் பச்சைநாவியைவைத்து பூதியகதையையொப்பாகும் எ-று. 118

அருமையும் பெருமைதானு மறிந்துடன் படுவர்தம்
மால், இருமையு மொருமையாகி யின்புறற்கேதுவுண்
டாம், பரிவிலாச் சகுனிபோலப் பண்புகெட்டவர்க டம்
பால், ஒருமையி னிரயமெய்து மேதுவே யுபருமன்றே.

இ-ள். ஒருவருடைய அருமை பெருமைகளை யறிந்து உடன்பாடான சினேகஞ் செய்வார்களாகில் இம்மை மறுமை இருமையிலும் ஒரேவிதமான இன்பத்தை யடைவதற்கேது வுண்டாகும் சகுனியைப்போல அன்பில்லாமல் துற்குணங் கொண்டவர்களின் சினேகத்தால் மென்மேலும் பாவங்களே அதிகப்பட்டு நரகவேதுவே யுண்டாகும் எ-று. 119

ஒருவனே யிரண்டுயாக்கை யூன்பொதி யானநாற்றம்
உருவமும் புகழுமாகு மதற்குள்நீ யினபமுற்று
மருவியயாக் கையிலங்க மாய்ந்திடு மற்றியாக்கை
திறமதா யுலகமேற்றச் சிறந்துபின் னிற்குமன்றே.

இ-ள். உலகத்தில் மனிதர்களுக்கு பொய்யுடம்பென்றும், புகழுடம்பென்றும், இரண்டுடம்புகளுண்டு. அவற்றுள் இவ்வுலகவின்பங்களை நுகர்வதற்கேதுவாகிய நாற்றம் பொருந்திய மாமிச பிண்டமாகிய பொய்யுடம்பு இவ்வுலகத்திலேயே நிலையின்றி மாய்ந்துவிடும். புகழுடம்போவென்னில், இம்மைமறுமைகளுக்கேதுவாய் என்றுமழியாமல் உலகமெங்கும் சிறந்த கீர்த்தியோடு நிலைநிற்கும் எ-று. 120



கலி விருத்தம்.

வேலியானது பயிர்தனை மேய்ந்திட விதித்தாற்
காலனானவ னுயிர்தனைக் கவர்ந்திட நினைத்தால்
ஆலமன்னையர் பாலகர்க் கருத்துவ ரானால்
மேவிதோர்ந் துடன்யார்கொலோ விலக்குவர் வேந்தே.

இ-ள். அரசனே! காவலாக ஏற்பட்ட வேலியை பயிரையுண்ணவும், எமன் உயிர்களைக்கவரவும் கொல்லத்தக்க விஷத்தைத் தாய்மார்களே பிள்ளைகளுக்கு ஊட்டவும் நினைப்பார்களாகில் இதையறிந்து தடுப்பவர் யாவர் எ-று. 121

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அறங்கெடு நிதியுங்குன்று மாவியு மாயுங்காய
திறங்கெடு மதியும்போகி நீண்டதோர் நரகிற்சேர்க்கு
மறங்கெடுமறையோர்மன்ன வணிகர்நல்லுழவோரென்று
குலங்கெடுவேசைமாதர் குணங்களைவிரும்பினோர்க்கே.

இ-ள். சாந்தகுணத்தையுடைய வேதியர் அரசர் வைசியர் உழவினர் என்னும் ஜாதிகளினுயர்வைக் கெடுக்கத்தக்க பரத்தையரை இச்சித்தவர்களுக்குத் தருமங்கெடும் செல்வங்குறையும், உயிரழியும், தேககாந்தியுமாறும், புத்தியுங்கெட்டு நீண்ட நரகத்தை யடைவார்கள். எ-று.

இரண்டு சகோதரிகள் தங்களிடத்திற்
கலந்த இரண்டு தலைவர்களைப்பற்றிக் கூறியது.

கட்டளைக்கலித்துறை.

அரவிந்தநண்பன் சுதன்றம்பிமைத்துன னண்ணன் கையில், வரமுங்கியாயுதம் பூண்டவன்காணுமற் றங்கவனோ, பரமன்றிகிரியை யேந்திய மைந்தன் பகைவன் வெற்பை, புரவென்றடுத்தவன் மாற்றான்றன் சேவகனெண்டொடியே.

இ-ள். தங்காய்! என் வீட்டிற்கு வந்தவன் தாமரைக்குச் சினேகனாகிய சூரியன், அவன் புத்திரன் கர்ணன்,

அவன் தம்பி அருச்சுனன், அவ்வருச்சுனன் மைத்துனன் கிருஷ்ணன், அக்கிருஷ்ணன் தமையன் பலராமன் அப்பலராமன் கையிலுள்ள ஆயுதம் கலப்பை, அக்கலப்பை பூண்டிருப்பவனாகிய எருமைக்கடாவென் றறிவாயாக என்று சொல்லி, உன் வீட்டிற்கு வந்தவன் யாரென்று கேட்க, தமக்காய் சிவபெருமான் வசிக்கும் கயிலைமலையை யெடுத்த விராவணன், அவ்விராவணனுக்குப் பகைவனாகிய ஸ்ரீராமபிரானுக்கு தாசத்துவம் பூண்டவனும், அவ்விராவணனோடு பகைத்து எதிர்த்தவனும், பர்வதங்களை யெல்லாம் இலேசாகப் பெயர்த்தெடுத்தவனுமாகிய அஞ்சநேயன் எனவே குரங்கென்றறிவா 133
யாக எ-று.

இரண்டு நண்பர்கள் தாங்கள் கலவிசெய்த
மங்கையர்களியல்பைக் கூறியது.

சங்கரன்றேவி தமையன்மனைவி தனக்குமூத்தாள்
அங்கலளேறிய வாகனங்காணுமற் றங்கவளோ
கொங்கைகளீரைந் துடையவளாயிக் குவலயத்தில்
எங்குந்திரிகின்ற வயிரவனூர்யென் றேதினையே.

இ-ள். ஒருவன் மற்றொருவனைப்பார்த்து நண்பனே! நீகலந்தமங்கை எத்தன்மையாளென, சிவபெருமானுக்கு நாயகியாகிய பார்வதிஅப்பார்வதியின் தமையன் விஷ்ணு அவ்விஷ்ணுவின் மனைவி இலக்குமி, அவ்விலக்குமிக்கு முன்பிறந்தவள் மூதேவி, அம்மூதேவியானவளேறிய வாகனமாகும் எனவே கழுதையென்று கூற, அதைக் கேட்ட மற்றவன் நான் கலந்த மங்கையோவெனில் வயிரவக்கடவுளின் வாகனமாயும், பத்துமுலைகளை யுடையனவாயும், எங்குந்திரிகிற நாயென்றறிவாயாக. எ-று.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

இந்திரன்பதங்கள்குன்று மிறையவர்பதங்கண்மாறு
மந்தரநிலைகள்பேற மறுகயல்வறுமையாகும்
சந்திரகதிரோன்சாயுந் தரணியிற்றேயமாளும்
அந்தணர்கருமங்குன்றில் யாவரோவாழ்வர்மண்ணில்



இ-ள். வேதியர்கள் தாங்கள் செய்யத்தக்க கிரியைகளை செய்யாதொழிந்தால் இந்திரனது செல்வங்களும் குறையும், இராஜாக்கள் வாழ்க்கையும்மாறும், மந்தரமலையினது நிலைகளும் பெயரும், எவ்விடங்களினும் வறுமைமிகுதியாம். சந்திரசூரியர்களும் நிலைகெடுவார்கள், பூவுலகமெல்லாம் பொலிவழிந்து நிற்கும் உலகில் வாழத்தக்கவர் யார்? எ-று. 125

தலைவி கூற்று.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

என்னனைக்கன்று முத்தனைக்குனிக்கு மிறையனை
யனைக்குமே பன்று
மன்னனைக்கன்று பின்னனைக்குதவா வன்புளால்
வருந்தி வாடுவேனை
முன்னனைக்கொன்று பின்னனைப்புரந்த முதுபகை
யவன்பிதா வுறாமல்
கன்னனைக்கொன்று விசயனைப்புரந்த * கவத்துவ
ராமகிருஷ்ணனே.

இ-ள். என் தாய்க்குமாத்திரமல்ல, முத்தனுக்குத் தாயானகரும்பை வில்லாகவளைக்கும் மன்மதனுக்குத் தாயாகிய இலக்குமிக்குப் பிறப்பிடமான சமுத்திரத்தாலு பெற்றதாய்க்கேயல்லாமல் பின்வளர்ந்த தாய்க்குமுதலி குபிற்பஞ்சியாலும், துன்பமுற்றுவாட்ட மடைவேனை, இராமாவதாரத்தில் மூத்தவனாகிய வாலியைக்கொன்று இளையவனாகிய சுக்ரீவனை இரக்ஷித்த பழமையான பகையை, அவன் தந்தையான இந்திரனடையாமல் கிருஷ்ணாவதாரத்தில் கர்னனைக் கொன்று அர்ச்சுனனை இரக்ஷித்த கௌஸ்துவாபரண மணிந்த இராமகிருட்டினனே எ-று.

நேரிசை வெண்பா.

பண்புடையர்க் கோர்பறவை பாவத்திற் கோரிலக்கம்
கண்பிலரைக் கண்டாக்கா ணுற்காலி— திண்பவியை

---

* கவத்துவம என்பது கபடமென்னும் பொருளுக்கும் இடமாய் நின்றது.

ஆள்வார் மதுரை யழகியசொக் கர்க் * கரவம்
கீள்வா கனநன் னிலம்

இ-ள். நற்குணமுள்ளவருக்கு ஈ-(கொடு) பாவச்செய்கைக்கு அஞ்சு-(பயப்படு) நண்பற்றவரைக்காணில் விலகு-(நீங்கு) வலியிருந்த உலகத்தையாளும்படியான மதுரை சோமசுந்தரேசருக்குப்பணிவிடைசெய் எ-று. 127

மும்மூர்த்திகளின் உணவாதிகளைப்பற்றிக் கூறியது

சிறுவனளை பயறு செந்நெற் கடுகு
மறிதிகிரி தண்டு மணிநூற்—பொறியாவம்
வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றூழம் பூவே கறி.

இ-ள். பிரமனுக்குப் பயறு கறியும் செந்நெல் உணவும், தண்டம் ஆயுதமும், உபவீதம் பூஷணமும், அன்னம் வாகனமும், தாமரை வசிக்குமிடமாம், விஷ்ணுவுக்கு உறிவெண்ணெய்கறியும், பூமியுணவும், சக்கரம் ஆயுகரன் கௌஸ்துவம் ஆபரணமும், கருடன் வாகனமும் அங்கவ ளை சிக்குமிடமாம், சிவபெருமானுக்கு பிள்ளைக்கறி கொ வண விஷம் உணவும, மான் ஆயுதமும், சர்ப்பம் பூஷண எங்குர் ம, ரிஷபம் வாகனமும், திருக்கைலாயம் வசிக்குமிடமாகும் எ-று. 128

சிரம்பார்த்தா னீசனயன் றேவிதனைப் பார்த்தான்
கரம்பார்த்தான் செங்கமலக் கண்ணன்—உரஞ்சேர்
சிலைவளைத்த திண்டோளன் சிராம வண்ணான்
கலைவெளுத்த வெண்மைதனைக் கண்டு.

இ-ள். சிவன்தலையைப்பார்த்தான், பிர்மா தன்மனைவியைப்பார்த்தான், சிவந்த தாமரைபோலுங் கண்ணன் தன்கையைப்பார்த்தான் பலமுடைய மலையையும் வளைக்கச் செய்யும்படியான புயமுடைய ஸ்ரீராமனென்னும் பெயரையுடைய வண்ணான், வஸ்திரம் வெளுத்துக் கொடுத்த வெள்ளை நிறத்தைப் பார்த்தவுடனே எ-று

* அரவபணீ வாகனநன்னிலம் என்றதில் அரவம்-பணி, வாகனம்-விடை, நிலம்-செய், எனவே பணிவிடை என்பது பொருள்.



கட்டளைக் கலித்துறை.

கரியொன்று சொன்மிகும் பையேறக் கற்றவர் சூழ்ந்துதொழ, எரியொன்று செல்வன் றலாத்தினிலேறி விருண்டமஞ்சு, சொரிகின்ற நாகமின் சொற்றினிலே றித்தொடர்ந்துவர, நரியொன்று சொந்தக் கனலேறிவந் தது நங்களத்தே.

இ-ள். யானை உருவமைந்த கணபதி பெருச்சாளியிலேறியும், கல்விமான்கள் சூழ்ந்து துதிக்க முருகக்கடவுள் மயிலேறியும் சூல்கொண்ட மேகங்கள் படர்ந்து மழை பொழிகின்ற பருவதத்திலுற்பவித்த உமாதேவி அன்னபட்சியிலேறியும், சம்பு நந்தியிலேறியும் நமமிடத்தே வந்தார்கள் * எ-று. 130

ஒருபாதி மால்கொள மற்றொருபாதி யுமையவள்கொண், டொருபாதியா லிறந்தான் புராரியிருநிதியோ, பெருவாரிதியிற் பிறைவானிற் சர்ப்பம் பிலத்தி தருவான போலு கொடையின்கை யோடென்கைதந் தனனே.

இ-ள். ஒருபாகத்தை விஷ்ணுகொள்ளவும், மற்றொரு பாகத்தை உமையவள் கொள்ளவும், ஆக இரண்டு பாகத்தாலும் திரிபுரசம்மாரகர்த்தனான சிவன் இறந்துபோயினன், சங்கநிதிவானத்திலும், ஆதிசேடன் பாதாளத்திலும் புகுந்தது, போஜமகாராஜனே கற்பக விருட்சம் போலும் கொடைத்தன்மை உன் கையிலும் கையிலேந்திய ஓட்டை என்கையிலுங் கொடுத்தனன் எ-று. 131

கப்பமத கடகளிற்றான் றில்லைவாழுங் கணபதிதன்
பெருவயிற்றைக் கண்டுவாடி
யும்பரெலாம்விழித்திருந்தா மயில்வேற் செங்கையுடைய
வறுமுகனும் கண்ணீரானான்

* மிருபொனமை-பெருச்சாளி, எரி யொனறுசெல்வன்-முருகன், தலா-ஸ்நானக் கூட்டம், மாயூரம்-மயில், நாகமின்-வரையுமை, சோறு-அன்னம், சொந்தக்கனல்-நந்தி (நம்தி)

பாம்புசுடர் கண்ணனுமோ நஞ்சுண்டான்மால் பயமடைந்
னுமையுமுடற் பாதியானாள் [தா
அம்புவியைப் படைத்திடுவ தவமேதேயென் றயனுமன்ன
மிறங்காம லலைகின்றானே.

இ-ள். மும்மதங்களோடுகூடிய யானை முகமுடையவராய்த்திருத்தில்லையில் அமரும் கணபதியினுடைய பெருத்த வயிற்றைப்பார்த்து பயந்து, தேவர்கள் * இமையாதிருந்தார்கள், வேலாயுதத்தைக் கையில் வைத்திராநின்ற ஆறுமுகன் கண்ணீரானான், பொருந்திய அக்கினிக்கண்ணையுடைய சிவன் விடத்தையுண்டான், மகாவிஷ்ணு பயம் அடைந்தான், உமாதேவியும் தேகப்பாதியானாள், பிரமா உலகத்தைப்படைத்திடுதல் வீணென்று அன்னம் இரங்காமலலைந்தான். எ-று. 132

காமமே குலத்தினையும் நலத்தினையுங் கெடுக்கவந்த
[illegible]கம், காமமே தரித்திரங்க ளனைத்தையும் புகட்டி
வைக்குங் கடாரங், காமமே பரகதிக்குச் செல்லாமல்
வழியடைக்குங் கபாடங், காமமே யனைவரையும் பகை
யாக்கி விஷக் கழுத்தரியுங் கத்திதானே.

இ-ள். (பெண்கள் மயக்கமாகிய) காமமே ஜாதிநெறி கெடுப்பும், நன்மையையும் கெடுத்து விடும்படியான குற்றம், வறுமைகளை நிறைத்து வைத்திருக்கும் பொக்கிஷம். முத்திமார்க்கத்திற் செல்லாம லடைத்திருக்குங் கதவு அனைவரையும் பகையுண்டாக்கி கழுத்தறுக்கத் தக்க வாளாயுதமாம் எ-று. 133

கலி நிலைத்துறை.

தடாரி கண்ணுமை பேரிகைசல் லரிடக்கை
கடாகமெங்கணு மதிர்ந்திட வொலித்திடக் காணல்
விடாதநாணகன் றன்னிய புருடனை விழைந்தே
அடாதுசெய்த மங்கையர்வகை யொலித்தல் போலாம்.

---

* இமையாதிருத்தல் - கண்ணசையா திருத்தல், ஈராறு - பனிரெண்டுபயம் - ஜலம் - அன்னம் - ஓதிமம், இவைகளை இயற்கையாயுள்ளதை வியந்து புதுமையாகக் கூறியிருக்கின்றார்.



இ-ள். பம்பை, மத்தளம், பேரிகை, சல்லரி, டக்கை நகராமுதலிய வாத்தியங்களதிர்ந்திடும் சப்தித்தலைப்பார்த்[illegible] விடக்கூடாத வெட்கம் நீங்கி அன்னிய நாயகர்களை இச்சித்துப் பொருந்தாத காரியத்தைச்செய்த பெண்களினது இயற்கைக்குணங்கள் சப்தித்தலைக்கேட்டது போலும் எ-று. 134

வெண்பா.

மாலைப் பொழுதினறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலை மினுக்கிட்டு விழித்திருந்து—சூலாகிப்
பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானா லென்செய்வாள் பின்.

இ-ள். மாலைக்காலத்திலே மணத்துடன்கூடிய மஞ்சளினையரைத்துப் பூசிக்குளித்து வேலை மினுக்கிட்டுக் கண்விழித்திருந்து கர்ப்பமாகிய (ஒருபிள்ளையினை) ஈன்றெடுத்தாள் பெயருமிட்டாள் அங்ஙனம் பெற்றபிள்ளையானது பித்தனாகிவிட்டால் பிறகு யாதுசெய்வாள் எ-று

நாய்க்குண்டு தொண்டு நமக்குண்டு பிச்சை நமனை
வெல்ல, வாய்க்குண்டு மந்திர பஞ்சாட்சர மதியாமல்
வரும்,பேய்க்குண்டுநீறு திகைப்புண்டுநின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டு தேசிகன் றன்னருணோக்கங்க ணோக்கு
தற்கே.

இ-ள் நாயானது வீடுகடோறும் பொறுக்கித் (தின்பதற்கு) இலைக்கட்டு உளது, நமக்கு (ஊசாரிடுகின்ற) பிச்சைச்சோறு உளது, இயமனை செயிப்பதற்குப் பஞ்சாட்சரமகாமந்திரம் வாயிலுள்ளது, மதியாமல் (எதிர்த்து வருகின்ற) பேயினுக்கு அதையோட்ட விபூதியுளது, பிரமிப்பையடைந்து உள்ள சென்மநோயாகிய பிணிக்கு ஆசிரியனுடைய திருவருணோக்கமானது நம்மை நோக்குதற்கு உளது எ-று. 136

பதினான்குசீர் விருத்தம்.

தண்டுல மிளகின் றாள்புளியுப்பு தாளிதம்
பாத்திர மிதேஷ்டம்

தாம்புநீர் தேற்ற மூன்றுகோ லாடைசக்கி
முக்கி கைராந்தல்
கண்டகங் காண்பான் பூஜைமுஸ் ஸிப
கழல்குடைசேவல் சிற்றுண்டி
கம்பளி யூசி நூலடைக் காயிலையை
கரண்டகங் கண்டமேற்றங்கி
துண்டமூ றியகாய் கரண்டி நல்லெண்ணெய்
துட்டுடன் பூட்டுமேகத்தி
சொல்லிய தெல்லாங் குறைவறத் திருத்தித்
தொகுத்துபற்பல வினுமமைத்துப்
பெண்டுக டுணையோ டெய்தவா கனனுய்
பெருகநிலை நீர்நிழல்விறகு
பிரஜைபுக்கங்குமிடஞ் சமைத்துண்டுபுறப்படல்
யாத்திரைக் கழகே.

இ-ள். அரிசி, மிளகுப்பொடி, புளி, உப்பு, மிகுதியான தாளிதபதார்த்த கறிவடகம், கயிறு, தண்ணீர் அளவறிய ஊன்றுகோல், வஸ்திரங்கள், சக்கிமுக்கி அல்லது நெருப் புண்டாகுங் கருவி, கைராந்தல், அறிவாள், கண்ணாடி, பூசைக்குரிய சாமான்கள், பாதரட்சை, குடை, வேலை யாள், சிற்றுணவு அல்லது பலகாராதிகள் கம்பளி, ஊசி, நூல், வெற்றிலையாதி வைக்கும் பை, கரண்டகம், எழுத் தாணி, ஊறுகாய்த்துண்டுகள், கரண்டி நல்லெண்ணெய், துட்டு பூட்டு, கத்தி இவை முதலாகச் சொல்லப்பட்ட வகைகளெல்லாங் குறைவில்லாமல் திருத்தத்தோடு பல வகைகளுஞ் சேகரித்து ஸ்திரீகள் துணையோடு சரியான வாகனத்தோடு பெருத்த நிலைமையான ஜலம், நல்ல நிழல், விறகு ஜனங்கள் தங்கும் இடம், கண்டு சமைத் துண்டு, பிரயாணஞ்செய்தல் யாத்திரைக்கழகாம் எ-று

விவேகசிந்தாமணி மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.

———

# வேதாந்த சித்தாந்த புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணப்பாட்டு சப்த காண்டமும் 2-வால்யம் | 10 | 0 | 0 |
| வில்லிபுத்தூரார் பாரதக்கவி | 3 | 8 | 0 |
| நல்லாப்பிள்ளை பாரதக்கவி | 12 | 0 | 0 |
| ஆரியப்புலவர் பாகவதப்பாட்டு | 3 | 8 | 0 |
| ஐயங்கார் பாகவதம் | 7 | 0 | 0 |
| விநோதரசமஞ்சரி கிளேஸ் | 2 | 8 | 0 |
| ஷை திக்கு | 1 | 8 | 0 |
| ஞானவாசிட்டம் உரையுடன் | 4 | 0 | 0 |
| ஷை கிளேஸ் | 6 | 0 | 0 |
| இராமலிங்கசுவாமிகள்சந்நிதிமுறைப்பிரபந்தம் | 0 | 8 | 0 |
| தேசிக பிரபந்தம் | 0 | 12 | 0 |
| [illegible]முக பிரபந்தம் | 1 | 8 | 0 |
| கட்டளைப் பிரபந்தம் | 0 | 8 | 0 |
| நாலாயிரப்பிரபந்த இரட்டு | 0 | 8 | 0 |
| நாலாயிரப் பிரபந்தம் | 4 | 0 | 0 |
| அரிச்சந்திரபுராணம் மூலம் | 0 | 8 | 0 |
| ஷை உரையுடன் | 2 | 8 | 0 |
| பெரியபுராணச் செய்யுள் | 4 | 8 | 0 |
| ஷை பாட்டு உரை | 8 | 0 | 0 |
| நைடதம் மூலம் | 1 | 0 | 0 |
| ஷை மூலம் உரை கிளேஸ் | 3 | 8 | 0 |
| ஷை விருத்தியுரை | 4 | 0 | 0 |

எமது விலாசம் :—

**மனோன்மணி விலாஸ புத்தகசாலை,**

போஸ்டு பாக்ஸ் நெ. 141,

80, A. பத்துரோட்டு, கோலாலம்பூர், F. M. S.